# செல்வன்
# செந்தமிழ் வாசகம்

நான்காம் புத்தகம்

ஆசிரியர் :
வித்துவான் G. மைக்கேல், M.A.
பதிப்பாசிரியர் :
மகாவித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை

[Paper used : 24 lbs. White Printing]

ஜெகசெல்வன் கம்பெனி

ராமவர்மபுரம் | தெப்பக்குளம்
நாகர்கோவில் | திருச்சிராப்பள்ளி



[விலை 80 ந.பை.

முதற் பதிப்பு—நவம்பர், 1958
இரண்டாம் பதிப்பு—மே, 1959
மூன்றாம் பதிப்பு—ஏப்பிரல், 1961
நான்காம் பதிப்பு—ஆகஸ்டு, 1961



*Trade Mark* :
'SELVAN'

APPROVED FOR CLASS USE
BY THE MADRAS TEXT-BOOK COMMITTEE
[Supplement to Part I-B of the
[Fort St. George Gazette dated 13-5-1959, Page 19]




Kabeer Printing Works, Madras (4536)

# பொருள் அடக்கம்

## செய்யுட்பகுதி :

### I. நீதி :



### II. கதைப் பகுதி :

# நாட்டு வணக்கம்

ஜன கண மன அதி நாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா

பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா

விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா

தவ சுப நாமே ஜாகே
தவ சுப ஆசிஷ மாங்கே

காயே தவ ஜய காதா

ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா

ஜயஹே! ஜயஹே! ஜயஹே!
ஜய ஜய ஜய ஜயஹே!

# தேசீய கீதம்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிறாய்.
நின் திருநாமம், பஞ்சாபையும் சிந்துவையும்
குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும்
திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும்
உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.
அது விந்திய ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;
யமுனை கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது;
இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.
அவை நின் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப்
பாடுகின்றன;
இந்தியாவின் சுகதுக்கங்களைப் நிர்ணயிக்கிற உனக்கு
வெற்றி! வெற்றி! வெற்றி!

# நான்காம் புத்தகம்




## 1. நமது நாடு

1. நமது நாடு தமிழ் நாடு. சேர நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு என்பவை இதன் பிரிவுகள். வடக்கில் திருவேங்கடமும், தெற்கில் குமரி முனை-யும், கிழக்கிலும் மேற்கிலும் கடலும் நம் நாட்டின் எல்லைகளாய் உள்ளன.

2. நாம் பேசுவது தமிழ் மொழி. குழந்தைப்-பருவமுதல் நாம் இதனைப் பேசுகின்றோம். ஆத-லால், இது நமது தாய் மொழியாகும். இது மிகவும் பழமையானது. இது எந்தக் காலத்தில் உண்டாயிற்று என்பதை நாம் அறிதல் இயலாது.

3. ஆதியில் மனிதர் தம் உணர்ச்சியை ஒலியால் வெளிப்படுத்தினர். குழந்தைகள் தங்கள் உணர்ச்சியைப் பல ஒலியால் தெரிவிக்கின்றன அல்லவா? உணர்ச்சியை ஒலியாலும் சைகைகளாலும் தெரிவிக்கலாம்; ஆனல், சொற்களால் தெரிவிப்பதே சிறப்பாகும்.

4. நாள் ஆக ஆக, மனிதர் அவசியமான சொற்களை அமைத்துக்கொண்டனர். சொற்கள் பெருகின. முதலில் அச்சொற்களின் உதவியால் அவர்கள் அருகிலுள்ளவர்களிடம் பேசி, தங்கள் மனத்தின் எண்ணத்தைத் தெரிவித்து வந்தார்கள்; தூரத்திலுள்ளவர்களுக்குச் செய்தி தெரிவிக்க ஒரு வழி கண்டுபிடித்தார்கள். ஒவ்வோர் ஒலிக்கும் ஒவ்வோர் அடையாளத்தை ஏற்படுத்திக்கொண்டார்கள். அந்த அடையாளம் எழுத்து எனப்பட்டது. எழுத்துக்கள் பெருகவே, மொழி வளர்ந்தது.

5. நமது மொழி ஒரு காலத்தில் வடக்கே இமயமலை வரையும் பரவியிருந்தது; இப்பொழுது தென்னிந்தியாவின் தென்பாகத்திலேதான் பேசப்பட்டு வருகின்றது. தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு முதலிய மொழிகள் நம் தமிழ் மொழியிலிருந்து பிரிந்து வழங்கும் மொழிகளேயாகும்.

6. பல நூறு ஆண்டுகளுக்கு முன் பாண்டிய அரசர்கள் தமிழ்ப்புலவர்களைச் சேர்த்துத் தமிழ்ச்சங்கம் ஏற்படுத்தினர்கள். அவர்களால் தமிழ் மொழி வளர்க்கப்பட்டுச் செம்மையுற்றது. அதனல், தமிழ் 'செந்தமிழ்' என வழங்கப்பட்டது; பாண்டி நாடும் செந்தமிழ் நாடு என வழங்கப்பட்டது.

7. தமிழில் நூல்கள் மிகுதியாய் உள்ளன. அவற்றுள் சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி, கம்பராமாயணம், மணிமேகலை என்பவை மிகச் சிறந்தவை. திருக்குறள் என்னும் நீதி நூல் உலக மக்கள் பலராலும் போற்றப்படுகிறது.

சொற்கள் :

| | | |
|---|---|---|
| தாய் மொழி | உணர்ச்சி | சைகை |
| தனிச்சிறப்பு | கம்பராமாயணம் | திருக்குறள் |
| தெலுங்கு | மலையாளம் | கன்னடம் |
| தமிழ்ச்சங்கம் | துளு | தென்னிந்தியா |
| சீவகசிந்தாமணி | சிலப்பதிகாரம் | மணிமேகலை |

கேள்விகள் :

1. நம் நாடு எது? அதன் எல்லைகள் யாவை?
2. 'தாய் மொழி' என்பது யாது?
3. மொழிகள் எப்படி உண்டாகின்றன?
4. மனிதர் தம் எண்ணத்தை முதலில் எப்படித் தெரிவித்தனர்?
5. நமது மொழியிலிருந்து பிரிந்த மொழிகள் எவை?
6. தமிழில் உள்ள சிறந்த மொழிகள் எவை?

பயிற்சி :

1. எதிர்ச்சொற்கள் எழுது :
   அருகு பெருக பிரிந்து புகழ்ந்தனர்.
2. ஆ—ஓர் ஒலியைக் குறிக்கும் அடையாளம். இது ஓர் எழுத்து. இது 'பசு' என்று பொருள் படும் போது ஒரு சொல்.
   ஆல்—இரண்டு ஒலிகளால் அல்லது எழுத்துக்களாலாகிய சொல்.

   ஓரெழுத்து, ஈரெழுத்து, மூவெழுத்துக்களாலாகிய சொற்கள் நான்கு நான்கு எழுது.

## 2. படம் பார்த்துக் கதை எழுதுதல்

[இந்த நான்கு படங்களும் ஒரு கதையை விளக்குகின்றன. கீழே எழுதப்பட்டுள்ளவற்றை மௌனமாக வாசித்துப் படங்களைப் பார்த்துக் கதையைத் தொடர்ச்சியாக எழுது.]

1. ஒரு காட்டில் ஒரு சிற்ருறு ஓடிக்கொண்டிருந்தது. அதில் தண்ணீர் அதிகமாய் இருந்தது. அதனுல், அதைக் கடக்கக் குறுக்கே ஒரு சிறிய பாலம் அமைக்கப்பட்டிருந்தது. அப்பாலத்தில் ஒரு சமயத்தில் ஒருவர் மட்டுந்தான் செல்ல முடியும்.

2. ஒரு நாள் ஆற்றின் இக்கரையிலுள்ள ஒரு செம்மறியாடு அக்கரைக்குச் செல்ல விரும்பியது. அது பாலத்தின்மீது ஏறிப் பாதித்தூரம் வந்தது. அதே சமயத்தில் அக்கரையிலிருந்து மற்ருெரு செம்மறியாடு பாலத்தின்மீது வந்துகொண்டிருந்தது. இரண்டும் பாலத்தின் நடுவில் வந்தன. ஒன்றையொன்று கடந்து செல்ல இடமில்லை. சிறிது நேரம் அவை ஒன்றையொன்று பார்த்துக்கொண்டு நின்றன. பின்பு ஒன்று பாலத்தின்மீது படுத்துக்கொண்டது. நின்ற ஆடு அதன்மீது மெதுவாகத் தன் காலை வைத்து ஏறி, அதனைக் கடந்து சென்றது.

**கேள்விகள் :**

1. ஆற்றின் குறுக்கே பாலம் எதற்காகப் போடப்பட்டிருந்தது ?

2. முதலில் வந்த ஆடுகள் பாலத்தை எவ்வாறு கடந்து சென்றன ?

3. பின்பு வந்த ஆடுகள் என்ன செய்தன ?

4. அதனால் என்ன நேர்ந்தது ?

5. இந்தப் பாடத்திற்குப் பொருத்தமான தலைப்புக் கொடு.

6. இக்கதையிலிருந்து அறிய வேண்டிய படிப்பினையை எழுது.

பயிற்சி :

1. கீழ் வரும் சொற்களைச் சேர்த்தெழுது :—

சிறு + ஆறு—சிற்றாறு.
சிறு + அன்னை ——.
சிறு + அப்பன் ——.
சிறு + ஆள் ——.

2. கீழே கொடுக்கப்பட்டுள்ள சொற்றொடர்களைப் பிரித்துக் காட்டு :—

தண்ணீர் — தண் + நீர்
உண்ணீர் —
மண்ணீர் —
கண்ணீர் —



## 3. உண்மை வெளியாதல்

1. மங்களபுரியில் வேலன் என்னும் குடியானவன் வாழ்ந்து வந்தான். அவன் எப்போதும் உண்மையே பேசி வந்தான். அவனை அனைவரும் நம்புவர். அவன் நன்றாக வேலை செய்தான்; தன் நிலத்தில் காய் கறிகள் பயிர் செய்தான். அவன் அவற்றைப் பக்கத்தூரில் உள்ள சந்தைக்குக் கொண்டு சென்று விற்று வருவது வழக்கம்.

2. ஒரு நாள் சந்தையிலிருந்து திரும்பி வரும் வழியில் அவன் பாதையில் ஒரு பணப்பையைக் கண்டான். அவன் அதைத் தன் வீட்டிற்கு எடுத்துச் சென்றான்; அக்கம்பக்கத்தில் உள்ளவர்களிடம் விசாரித்தான். ஒருவரும் பணப்பையை இழந்ததாகச் சொல்லவில்லை.

3. பக்கத்துத் தெருவில் ஆழ்வார் செட்டியார் என்பவர் வாழ்ந்தனர். அவர் பெரிய உலோபி; மளிகை வாணிகத்தில் பெரும்பொருள் சம்பாதித்-தவர். ஒரு நாள் அவர் சந்தைக்குச் செல்லும் வழியில் ஆயிரம் ரூபாய் வைத்திருந்த பணப்-பையை இழந்துவிட்டார். அதைக் கண்டெடுத்-தவர் கொண்டுவந்து கொடுத்தால், நூறு ரூபாய் பரிசு அளிப்பதாகத் தெரிவித்தார்.

4: இச்செய்தியை வேலன் அறிந்தான். உடனே பணப்பையுடன் செட்டியார் வீட்டுக்குச் சென்ருன். செட்டியார் பணப்பையைப் பெற்றுக்-கொண்டார். ஆனல், அவருக்குப் பொருள் மீது மிகுந்த ஆசையுண்டு. அதனல், தாம் தெரிவித்த-படி நூறு ரூபாய் பரிசு கொடாமல் ஏமாற்ற, அவர் ஒரு சூழ்ச்சி செய்தார். அவர் அவனிடம், "வேலா, இப்பணப்பையில் ஒரு தங்க மோதிரம் இருந்ததே! அது எங்கே?" என்று கேட்டார். அவன், "ஐயா, ஆயிரம் ரூபாய்தான் இருந்தது. மோதிரம் இல்லையே!" என்ருன். அவர் அவனை நீதிபதி-யிடம் அழைத்துச் சென்ருர்.

5. நீதிபதி குடியானவன் உண்மையுள்ளவன் என்பதை அறிந்திருந்தார்; அவனை ஏமாற்றவே செட்டியார் பொய் சொல்வதாகத் தெரிந்துகொண்-டார். அவர் செட்டியாரிடம், "செட்டியாரே, வேலன் உண்மையையே கூறுகிருன்; அவன் கண்-டெடுத்த பை உம்முடையது அன்று; மோதிரம் உள்ள பைதான் உம்முடையது; ஆதலால், இப்-பையை அவனிடம் கொடுத்துவிடும்," என்று தீர்ப்புக் கூறினர்.

6. செட்டியார் வெட்கமடைந்தார். நீதிபதி

பணப்பையைக் குடியானவனிடம் கொடுத்து விட்-டார். அவன் மகிழ்ச்சியுடன் வீடு சென்றான்.

சொற்கள் :

| | | |
|---|---|---|
| குடியானவன் | மளிகை | நீதிபதி |
| மங்களபுரி | சந்தை | நம்புவர் |
| காய்கறிகள் | உலோபி | பணப்பை |
| அக்கம்பக்கம் | செய்தி | ஆசை |
| மோதிரம் | தங்கம் | பரிசு |
| தீர்ப்பு | மகிழ்ச்சி | ஏமாற்றல் |

கேள்விகள் :

1. வேலன் வழியில் கண்டெடுத்தது என்ன ?
2. ஆழ்வார் செட்டியார் எதனை இழந்தார் ?
3. அவர் என்ன தெரிவித்தார் ?
4. வேலனை அவர் ஏமாற்றுவதற்காக என்ன சொன்னார் ?
5. நீதிபதி என்ன தீர்ப்புச் செய்தார் ?

பயிற்சி :

குடியானவனாகவும், செட்டியாராகவும், நீதிபதியாக வும் மூவர் நடிக்கலாம்.

# 4. கடிகாரம்



சேவற்கோ ழியுண்டு ; காகமுண்டு ;
—வானம்
செக்கச் சிவந்து தெரிவதுண்டு ;
மேவுபொன் னே !அதி காலை
தெரிந்திட
வேறும் கடிகாரம் வேண்டுமோடி ?

செங்கதிர் பொங்கி வருவதுண்டு ;
—நல்ல
செந்தா மரைகள் மலர்வதுண்டு ;
மங்கையே ! காலைப் பொழுதை
உணர்ந்திட
மற்றும் கடிகாரம் வேண்டுமோடி ?





தன்னிழல் தன்னடி ஆவதுண்டு ;
—சுடர்
தானும் தலைநேர் எழுவதுண்டு ;
இன்னமு தே !பகல் உச்சியி
தென்றிட
ஏதும் கடிகாரம் வேண்டுமோடி ?

விண்மணி ஆழியில் வீழ்வதுண்டு;
—வாசம்
வீசும்மந் தாரை மலர்வதுண்டு ;
கண்மணியே ! மாலைக் காலம்
குறித்திடக்
கையில் கடிகாரம் வேண்டுமோடி !





அம்புலி நட்சத்திரங்களுண்டு ;
—கணக்கு
ஆக்கி அறிய வழிகளுண்டு ;
இன்பமே ! நேரம் இரவில் அறிந்திட
இன்னும் கடிகாரம் வேண்டுமோடி ?

சுற்றுப் பொருளெல்லாம் உற்றுநோக்கி—அவை
சுட்டும் மணிநேரம் கண்டறிவாய்
பெற்றமுத் தே !இந்த உண்மை அறிவோர்க்குப்
பின்னும் கடிகாரம் வேண்டுமோடி ?

—கவிமணி. சி. தேசிக விநாயகம் பிள்ளை

சொற்கள் :

| | | |
|---|---|---|
| அதிகாலை | சிவந்து | ஆழி |
| சேவல் | மலர்வது | இன்னும் |
| செங்கதிர் | முத்து | உற்று |
| நிழல் | இன்பம் | அம்புலி |
| வீழ்வது | சுட்டும் | நட்சத்திரம் |
| கண்டு | மாலைக்காலம் | நோக்கி |
| மங்கை | விண் மணி | எழுவது |
| சுற்று | கண்மணி | கோழி |
| உச்சி | பொங்கி | பின்னும் |
| அடி | தெரிவது | தாமரை |

கேள்விகள் :

1. அதிகாலை நேரத்தை எவ்வாறு அறியலாம் ?
2. அதிகாலையில் வானம் எவ்வாறு தோன்றும் ?
3. காலையில் விரியும் மலர் எது ?
4. உச்சிப்பொழுதில் சூரியன் எங்கே இருக்கின்றான் ?

5. மாலைப்பொழுதில் சூரியன் எங்கே காணப்படு-கின்ருன்?

6. இரவுப் பொழுதில் வானத்தில் காணப்படுவன யாவை?

7. கடிகாரம் இல்லாமல் நேரத்தைக் காட்டும் பொருள்கள் எவை?

பயிற்சி:

1. தாய் தன் மகளை அழைக்கும் பெயர்களை எடுத்து எழுது.

2. எதிர்ச்சொல் எழுது:—காலை, சிவந்து, எழுவது.

3. கோழி, காகம்—பறவையைக் குறிக்கும் சொற்-கள்.

| | | | |
|---|---|---|---|
| தாமரை, மந்தாரை | — செடியைக் | ,, | ,, |
| பொன், கடிகாரம் | — பொருளைக் | ,, | ,, |
| வானம், ஆழி | — இடத்தைக் | ,, | ,, |
| பகல், இரவு | — காலத்தைக் | ,, | ,, |
| தலை, அடி | — சினையைக் | ,, | ,, |
| வாசம், இன்பம் | — குணத்தைக் | ,, | ,, |
| எழுவது, மலர்வது | — தொழிலைக் | ,, | ,, |

இவை பெயர்ச்சொற்கள், பெயராக வருவன பெயர்ச்-சொற்கள்.



## 5. உடற்பயிற்சி

1. நமது தேக பலத்தையும், சுகத்தையும் அடைவதற்கு அவசியமான செயல்களில் பயிற்சி பெறுதலே **உடற்பயிற்சி** ஆகும். தேகம் நல்ல நிலைமையிலிருந்தால், மனமும் நல்ல நிலைமையிலிருக்கும். அப்போதுதான் அறிவு வளரும்; மந்த புத்தி நீங்கும்; சுறுசுறுப்பு உண்டாகும்; சோம்பல் நீங்கும்.

2. முன் காலத்தில் நம்மவர் உடற்பயிற்சியில் கவனம் செலுத்தி வந்தனர். கிராமங்களில் சிலம்பக் கூடங்கள் இருந்தன. சிலம்ப வித்தை கற்பிக்கும் உபாத்தியாயர்கள் இருந்தார்கள். **மல்ல யுத்தம்** என்ற மற்போரிலும் மக்கள் பயிற்சி பெற்ருர்கள். சிலர் கூட்டமாய்ச் சேர்ந்து ஓர்

ஆசிரியரிடம் கற்று வந்தனர். மற்போரில் தேர்ச்சி பெற்றவன், இரண்டு பேருடன் சண்டை செய்து அவர்களை எளிதில் வென்றுவிடுவான். சிலம்பு வித்தை அறிந்தவன், பத்துப் பதினைந்து பேரையும் அடித்து வீழ்த்திவிடுவான்.

3. கிராம மக்கள் உடற்பயிற்சிக்காகப் பற்பல விளையாட்டுக்களை விளையாடி வந்தார்கள்; குட்டிப் பந்தாட்டம், கிளித் தட்டு, சடுகுடு முதலிய ஆட்டங்களை விருப்பத்துடன் ஆடினார்கள். இப்படிப்பட்ட விளையாட்டுக்களுக்குக் கருவிகள் பல வேண்டுவதில்லை. மேனாட்டு விளையாட்டுக்களில் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு கருவி வேண்டும். கிராம மக்கள் ஆடிய விளையாட்டுக்களுக்கு அதிகமான ஆட்கள் வேண்டா. பக்கத்துக்கு நான்கு பேர் இருந்தாலும் விளையாடலாம். விளையாட்டுக்களினால் விளையாடுபவர்களுக்குத் தீங்கு நேர்வதில்லை. உடல் உரமும், நுண்ணறிவும், ஆடும் சூழ்ச்சியும் வேண்டும். விளையாட்டால் உடலிலுள்ள எல்லா உறுப்புக்களுக்கும் பயிற்சி ஏற்படும். உடற்பயிற்சிக்காக இப்படிப்பட்ட விளையாட்டுக்களை விளையாடலாம்.

4. இளமையிலேயே உடற்பயிற்சியைச் செய்து வரவேண்டும். காலையில் எழ வேண்டும். திறந்த வெளியில் கசரத்து முதலிய பயிற்சிகளைச் செய்ய வேண்டும். அதனால், உடலிலுள்ள கெட்ட நீர் வெளிப்படும். வியர்வை வெளி வருவதனால், இரத்தம் சுத்தமடைகின்றது; தோலிலுள்ள அழுக்கு நீங்குகின்றது; இரைப்பை முதலிய உறுப்புக்கள் நன்றாகவே வேலை செய்கின்றன; நோய்கள் நீங்குகின்றன. அதனால், தூய்மையாக வாழலாம்;

உடல் உரமும் ஏற்படும் ; எப்பொழுதும் மகிழ்வாய் இருக்கலாம்.

சொற்கள் :

| | | |
|---|---|---|
| தூய்மை | மகிழ்ச்சி | எழ வேண்டும் |
| சுறுசுறுப்பு | வீழ்த்தி | திறந்த வெளி |
| சோம்பல் | கிளித்தட்டு | கசரத்து |
| பெறுதல் | சடுகுடு | அழுக்கு |
| சிலம்பக் கூடம் | குட்டிப் பந்து | வியர்வை |
| மற்போர் | கருவிகள் | இரைப்பை |
| கவனம் | சூழ்ச்சி | உடல் உரம் |
| வருத்தம் | உறுப்பு | நுண்ணறிவு |

கேள்விகள் :

1. ‘ உடற்பயிற்சி ’ என்பது என்ன ?

2. உடற்பயிற்சி செய்வதனால் ஏற்படும் நன்மைகள் என்ன ?

3. முன் காலத்தில் நம்மவர்கள் உடற்பயிற்சிக்காக என்ன செய்து வந்தார்கள் ?

4. கிராமங்களில் விளையாடும் விளையாட்டுக்கள் எவை ?

5. கிராம விளையாட்டுக்கும் மேனாட்டு விளையாட்டுக்குமுள்ள வித்தியாசம் என்ன ?

6. கசரத்து முதலிய பயிற்சிகள் செய்வதனால் நாம் எவ்வாறு வாழலாம் ?

பயிற்சி :

1. கூட்டமாக, சுறுசுறுப்பு, அவசியமான, மகிழ்வாக—இவற்றைப் பயன்படுத்தி வாக்கியங்கள் எழுது.

2. கெட்ட நீர், இசையுடன், தீங்கு—இதே பொருளுள்ள வேறு சொற்கள் எழுது.

3. அவன் ஓடினன்—'ஓடினன்' என்ற சொல் தொழில் நடந்ததைத் தெரிவிக்கின்றது. அதனல் இது வினைச்சொல் ஆகும்.

4. கீழே கோடிட்ட இடத்தை நிரப்பு:

ஆடு – ஆட்டம்

தேடு – —— வாடு – ——

நாடு – —— ஓடு – ——

5. ஆடு, தேடு, நாடு, வாடு, ஓடு — இவை என்ன சொற்கள்?

6. 'ஆட்டம்'-இது என்ன சொல்? இது பெயர்ச்சொல்; 'ஆடு' என்ற வினைச் சொல்லிலிருந்து உண்டான-பெயர்ச்சொல்—ஆதலால், வினைப்பெயர் அல்லது தொழிற்பெயர் எனப்படும். ஒரு வினையின் அல்லது தொழிலின் பெயராக வருவது தொழிற்பெயர்.

கீழ் வரும் வினைச்சொற்களைத் தொழிற்பெயர்கள் ஆக்கு:—

எழுது – எழுதுதல்

அழை – வா –

போ – தா –



# 6. ஒற்றுமை

1. நாம் ஒன்று சேர்ந்து வாழ வேண்டும். ஒருவரோடு ஒருவர் சண்டையிடக் கூடாது. நாம் ஒன்று சேர்ந்து வாழ்ந்தால், பல நன்மைகளை அடையலாம்; துன்பம் வந்தாலும், அதனை எளிதில் நீக்கலாம்.

2. ஒரு காட்டில் ஒரு வேடன் இருந்தான். அவன் அக்காட்டிலுள்ள விலங்குகளையும் பறவைகளையும் வேட்டையாடி, அவற்றின் இறைச்சியைப் புசித்து வந்தான்; ஒரு நாள் வேட்டையாடச் சென்று, ஒன்றும் கிடைக்காமல் திரும்பினான்; வழியில் ஒரு மரத்தின்மீது புருக்கள் கூட்டமாயிருப்பதைக் கண்டான்; உடனே, தான் வைத்திருந்த வலையை மரத்தினடியில் விரித்து, சில நெல் மணிகளைத் தெளித்துவிட்டு, ஒரு செடியின் பின் மறைந்துகொண்டான்.

3. புறக்கள் நெல் மணிகளைப் பார்த்தன. அவை அவற்றைத் தின்ன ஆவல் கொண்டன. ஆனால், சித்திரக்கிரீவன் என்னும் புறு அரசு, "இக்காட்டில் நெல் எப்படி வந்தது? இதில் ஏதோ சூது இருக்கின்றது!'' என்று கூறினது. அதைக் கேட்ட இளம்புறு ஒன்று, "இப்படி எண்ணினால், நமக்கு இரை அகப்படாது; நாம் அஞ்சாமல் போய்த் தின்போம்,'' என்றது. இவ்வார்த்தைகளைச் செவியுற்ற மற்றப் புறக்கள் தைரியமடைந்தன. அவை, நெல்லைத் தின்னும்பொருட்டு நிலத்தில் இறங்கி, வலையில் அகப்பட்டுக்கொண்டன. அதைக்கண்ட புறு அரசு, "நீங்கள் என் சொல்லைக் கேளாமையால், இத்துன்பம் அடைந்தீர்கள். நான் மட்டும் தனியே இருந்து என்ன பயன்?'' என்று சொல்லி, தானும் கீழே இறங்கி, வலையில் அகப்பட்டுக்கொண்டது.

4. புறக்கள் வலையில் சிக்கிக்கொண்டதும், வேடன் மறைவிலிருந்து வெளியே வந்தான். புறக்கள் அவனைக் கண்டு நடுங்கின? இளம்புறுவைப் பார்த்து, "உன் சொல்லைக் கேட்டதால், இத்துன்பம் நேர்ந்ததே!'' என்று புலம்பின. புறு அரசு அவைகளைப் பார்த்து, "நீங்கள் இப்பொழுது அழுது பயனில்லை. நாம் எல்லோரும் சேர்ந்து பறந்து இவ்வலையுடன் வேற்றிடம் செல்ல வேண்டும்,'' என்றது. உடனே புறக்கள் எல்லாம் வலையோடு வேற்றிடம் பறந்து சென்றன.

5. வேடன் வியப்படைந்து, "இவை ஒரே மனமாய் வலையுடன் பறந்து செல்கின்றன. ஆயினும், இவைகளுக்குள் சண்டை ஏற்படும். அப்போது, என் கையில் அகப்படும்,'' என்று

சொல்லிக்கொண்டு, அவற்றின் பின் ஓடினன். புருக்களோ, அவன் கண்ணுக்கு எட்டாமல் மறைந்து போய்விட்டன. அவன் வருத்தத்துடன் வீடு திரும்பினன்.

6. புரு அரசுக்கு நட்பான இரணியகன் என்னும் எலியரசின் வளை அருகில் புருக்கள் இறங்கின. எலி அரசு வெளியே வந்து, புரு அரசு வலையில் அகப்பட்டிருப்பதைக் கண்டது; அதன் வலைக் கயிற்றைத் தன் கூரிய பற்களால் அறுக்கத் தொடங்கியது. புரு அரசு, "நண்பா, முதலில் என் நண்பர்களை விடுவி; பின் என்னை விடுவி," என்று சொன்னது. எலி அரசும் அவ்வாறே செய்து, புருக்களை விடுவித்தது. புருக்கள் எலி அரசுக்கு நன்றி கூறின.

7. அவை சேர்ந்து முயற்சி செய்ததனல் துன்பத்திலிருந்து நீங்கின. 'ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு,' என்பது பழமொழி.

சொற்கள் :

| | | |
|---|---|---|
| வேடன் | வேட்டையாடி | விலங்கு |
| ஆவல் | புரு அரசு | சித்திரக்கிரீவன் |
| தெளித்து | மறைவு | சூது |
| எண்ணினல் | தைரியம் | இறங்கி |
| வலை | வளை | நடுங்கின |
| புலம்பின | வேற்றிடம் | வியப்பு |
| எட்டாமல் | வருத்தத்துடன் | இரணியகன் |
| கயிற்றை | கூறிய | அறுக்க |
| விடுவி | நன்றி | முயற்சி |
| நெல் | இரை | நன்றி |

**கேள்விகள் :**

1. வேடன் புறுக்களைப் பிடிக்க என்ன செய்தான் ?
2. புறுவரசு புறுக்களை என்ன சொல்லித் தடுத்தது ?
3. இளம்புறு என்ன சொன்னது ?
4. புறு அரசு தானும் ஏன் வலையில் அகப்பட்டுக்கொண்டது ?
5. புறு அரசு கூறிய சூழ்ச்சி என்ன ?
6. வேடன் ஏன் வியப்படைந்தான் ?
7. புறுக்கள் எதனால் விடுவிக்கப்பட்டன ?
8. இப்பாடத்தில் வரும் பழமொழி எது ?

பயிற்சி :

1. கூரிய, கூறிய; இரங்கி, இறங்கி; வலை, வளை— இச்சொற்கள் பொருளில் எவ்வாறு வேறுபடுகின்றன ?

2. வினைச்சொல் — தொழிற்பெயர்

| வினைச்சொல் | தொழிற்பெயர் |
|---|---|
| மறை | மறைவு |
| | மறைதல் |
| வா | வரவு |
| | வருதல் |
| | வருகை |

செல், வாழ், ஈ—இவற்றைத் தொழிற்பெயராக மாற்றி எழுது.

3. தமிழில் சொற்களைச் சேர்த்து எழுதும் போது க ச த ப என்ற எழுத்துக்கள் சில இடங்களில் மிகும். அவற்றைக் கவனித்தல் வேண்டும்.

| | | |
|---|---|---|
| இறைச்சியை | + புசித்து | —இறைச்சியைப் புசித்து |
| அரசுக்கு | + சொல் | —அரசுக்குச் சொல் |
| இறைச்சி | + ஐ | —இறைச்சியை |
| அரசு | + கு | —அரசுக்கு |

ஐ, கு என்பன வேற்றுமை உருபுகள். இவைகளுக்கும் பின் க ச த ப என்ற எழுத்துக்கள் மிகும்.

# 7. கடவுள் உண்மை



சூரியன் வருவது யாராலே?
சந்திரன் திரிவது எவராலே?
கார்இருள் வானில் மின்மினி
போல்
கண்ணிற் படுவன அவை
என்ன?



பேரிடி மின்னல் எதனாலே?
பெருமழை பெய்வது எவ
ராலே?
ஆரிதற் கெல்லாம் அதிகாரி?
அதைநாம் எண்ணிட
வேண்டாவோ?



தண்ணீர் விழுந்ததும் விதை
யின்றித்
தரையில் முளைத்திடும் புல்
ஏது?
மண்ணிற் போட்டது விதை
ஒன்று
மரம்செடி யாவது யாராலே?



எத்தனை மிருகம்! எத்தனை மீன்!
எத்தனை ஊர்வன பறப்பன பார்!
எத்தனைப் பூச்சிகள் புழுவகை-
கள்!
எண்ணத் தொலையாச் செடி
கொடிகள்!

எத்தனை நிறங்கள்! உருவங்கள்!
எல்லா வற்றையும் எண்ணுங்கால்
அத்தனை யும்தர ஒருகர்த்தன்
யாரோ எங்கோ இருப்பதுமெய்.
நிந்தை பிறரைப் பேசாமல்
நினைவிலும் கெடுதல் செய்யாமல்
வந்திப் போம்அதை வணங்கிடுவோம்
வாழ்வோம் சுகமாய் வாழ்ந்திடுவோம்.

—நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை

சொற்கள் :

| | | | |
|---|---|---|---|
| கடவுள் | கண் | வான் | மின்னல் |
| பேரிடி | மழை | தரை | மிருகம் |
| எத்தனை | அத்தனை | புல் | பறப்பன |
| நிறங்கள் | உருவங்கள் | புழு | பூச்சி |
| நிந்தை | நினைவு | ஊர்வன | வணங்கு |
| வந்திப்போம் | பிறர் | கெடுதல் | கர்த்தன் |
| எண் | முளை | விதை | அதிகாரி |

கேள்விகள் :

1. பகலில் வெளிச்சம் தருவது எது?
2. இரவில் வெளிச்சம் தருவது எது?
3. இடியும் மின்னலும் எப்போது உண்டாகின்றன?
4. மரம், செடி, புல் இவை எவ்வாறு உண்டாகின்றன?
5. மிருகம், மீன், புழு, பூச்சிகள் இவற்றைப் படைத்தவர் யார்?
6. அவரை நாம் என்ன செய்ய வேண்டும்?

பயிற்சி :

1. எதிர்ச்சொல் எழுது :—இருள், தண்ணீர், மெய்.
2. நினைவு, கெடுதல்—இவை என்ன பெயர்கள்?
3. பேசாமல், செய்யாமல், வந்திப்போம்.

பேசாமல், செய்யாமல் இவ்வினைச் சொற்கள் 'வந்திப்போம்' என்ற வினைமுற்றைக் கொண்டு முடிந்தன. இவை வினையெச்சங்கள் எனப்படும்.

# 8. கடிதம் எழுதுதல்–I

1. நாம் ஒருவரையொருவர் நேரிற்கண்டால், பேச்சு மூலம் நம் கருத்தைத் தெரிவிக்கிறோம். அயலூரிலுள்ளவர்களுக்குச் செய்தி தெரிவிக்க வேண்டுமானால், அச்செய்தியை எழுதியே தெரிவிக்க வேண்டும். இவ்வாறு எழுதித் தெரிவித்தலே **கடிதம்** எழுதுதல் எனப்படும்.

2. கடிதம் எழுதும் போது சில முறைகளைக் கவனிக்க வேண்டும். எழுதும் செய்தி நேரிலே பேசுவது போலத் தெளிவாயிருக்க வேண்டும். கடிதத்தின் வலப்பக்கத்து மூலையில் **எழுதும் இடமும் தேதியும்** எழுதப்பட வேண்டும். இடத்தைக் குறிப்பிடும் போது வீட்டின் எண், தெருவின் பெயர், ஊர்ப்பெயர் இவற்றை எழுத வேண்டும்.

3. நண்பனுக்கு எழுதினால், ‘நண்பா,’ என்றும், தகப்பனாருக்கு எழுதினால், ‘அன்புள்ள தந்தையீர்’, என்றும், ஆசிரியருக்கு எழுதினால், ‘அன்புள்ள ஆசிரியரே,’ என்றும் தொடங்கி எழுத வேண்டும்.

4. கடிதத்தின் செய்தி சுருக்கமாகவும் விளக்கமாகவும் அழகாகவும் எழுதப்படல் வேண்டும். கடிதத்தின் முடிவில் ‘அன்புள்ள நண்பன்,’ ‘கீழ்ப்படிதலுள்ள மகன்’, ‘உண்மையுள்ள மாணவன்’ என்னும் சொற்றொடர்களில் ஒன்றை எழுதி அதன் கீழ் எழுதுபவர் பெயரை எழுதவேண்டும்.

5. யாருக்குக் கடிதம் போய்ச் சேர வேண்டுமோ, அவர் விலாசத்தைத் தெளிவாக எழுத

வேண்டும். அவர் பெயரும், வீட்டின் எண்ணும், தெருவின் பெயரும், ஊரின் பெயரும், தபால் நிலயப் பெயரும் ஒன்றன்பின் ஒன்ருக எழுதப்பட வேண்டும்.

[ஒருவன் தன் கல்வியைப் பற்றித்
தன் தந்தைக்கு எழுதும் கடிதம்,]

10, புதுத் தெரு, மதுரை,
20—8—1958

அன்புள்ள தந்தையீர்,

வணக்கம்! இங்கு நான் உடல் நலத்துடன் இருக்கிறேன். உங்கள் நலம் அறிய ஆவலுள்ளவனுயிருக்கிறேன்.

நான் நன்ருகப் படித்து வருகிறேன்; பள்ளியில் நடைபெற்ற தேர்வுகளில் முதல்வனுய்த் தேறியிருக்கிறேன்; ஒவ்வொரு நாளும் உடற்பயிற்சியும் செய்து வருகின்றேன்; காலையிலும் மாலையிலும் பந்தாட்டம் ஆடுகிறேன்.

டிசம்பர் மாதம் பதினைந்தாம் தேதி எங்கள் பள்ளிக்கூட விடுமுறை நாட்கள் தொடங்கும். அப்போது ஊருக்கு வர எண்ணுகின்றேன்.

என் அன்புள்ள தாயாருக்கு எனது தாழ்மையான வணக்கம் தெரிவிக்க வேண்டுகிறேன்.

உங்கள் கீழ்ப்படிதலுள்ள மகன்,
மு. மாணிக்கம்

**விலாசம்:**

திருவாளர் ப. முத்துப்பிள்ளையவர்கள்,
22, பட்டா மணியக்காரத் தெரு,
அழகனேரி

# 9. கடிதம் எழுதுதல்–II

[ஓய்வு விண்ணப்பக் கடிதம்]

15, கோவில் தெரு,
மங்களபுரி,
4—9—1958

அன்புள்ள ஆசிரியர் அவர்களுக்கு,
4ஆம் வகுப்பு,
முனிசிபல் உயர்நிலைப்பள்ளி, விருதுநகர்.

அன்புள்ள ஆசிரியரே,

நான் விருதுநகரிலிருந்து இங்கு வந்தது முதல் எனக்குத் தலை வலியுடன் காய்ச்சலும் அதிகமாய் இருக்கின்றது. மருத்துவர் மருந்து கொடுத்து வருகிறார். அவர் நான் ஒரு வாரம் ஓய்வு கொள்ள வேண்டுமென்று சொல்லுகிறார். அதனால், தயவு செய்து, எனக்கு ஒரு வாரம் ஓய்வு அளிக்க வேண்டுமென்று தாழ்மையாய்க் கேட்டுக்கொள்ளு-கிறேன்.

உங்கள் கீழ்ப்படிதலுள்ள மாணவன்,
ம. அனவரதன்.

விலாசம்:

திருவாளர் மா. அரங்கநாதர் அவர்களுக்கு,
ஆசிரியர்,
4ஆம் வகுப்பு,
முனிசிபல் உயர்நிலைப் பள்ளி,
விருதுநகர்.

சொற்கள் :

| | | |
|---|---|---|
| தொடக்கம் | அன்புள்ள | ஆசிரியர் |
| தொடங்கி | அழகாக | கையெழுத்து |
| கீழ்ப்படிதலுள்ள | சொற்றொடர் | விலாசம் |
| வணக்கம் | தபால் நிலையம் | தேர்வு |
| ஓய்வு | நலம் | விண்ணப்பம் |
| தலை வலி | தாழ்மை | மருத்துவர் |
| முறைகள் | காய்ச்சல் | தயவு |

கேள்விகள் :

1. 'கடிதம்' என்பது என்ன ?
2. கடிதத்தின் முக்கியமான பகுதி எது !
3. கடிதத்தை எவ்வாறு முடிக்கவேண்டும் ?
4. கடிதம் எழுதியபின் செய்யவேண்டுவது என்ன ?

பயிற்சி :

1. உன் அண்ணன் கலியாணத்துக்காக ஐந்து நாட்கள் ஓய்வு அளிக்கும்படி உன் வகுப்பு உபாத்தியாயருக்கு ஒரு கடிதம் எழுது.
2. இப்பாடத்திலிருந்து காலப்பெயர், இடப்பெயர், பொருட்பெயர், தொழிற்பெயர் இவற்றிற்கு ஒவ்வோர் உதாரணம் எழுது.
3. எழுதித் தெரிவி. எழுதப்படிக்கத் தெரிந்து-கொள்—எழுதி, எழுத இவை வினையெச்சங்கள் இவற்றின பின் க ச த ப என்ற எழுத்துக்கள் மிகும்.

க ச த ப என்பன மிகுவதற்கு இப்பாடத்திலிருந்து உதாரணங்கள் எழுது.




# 10. என் பயணம்

1. நான் அனவரதன் எழுதிய கடிதம். நான் விருது நகருக்குப் பயணம் செய்த விதத்தைக் கூறுகிறேன் :

2. அனவரதன் என்னை மடித்து உரையுள் இட்டு, என்மீது பதினைந்து காசு தபால் முத்திரைத் தலை ஒட்டி, தபாற்பெட்டியினுள் போட்டான்.

3. அங்குள்ள தபால் அலுவலர் என்னை எடுத்து அவ்வூர்த் தபால் தேதி முத்திரையை இட்டார் ; பின்பு, என்னை மற்றக் கடிதங்களுடன் சேர்த்து ஒரு பையில் இட்டார் ; பையைக் கயிற்றினால் கட்டி அரக்கினால் முத்திரை வைத்தார். ஓர் ஆள் அப்பையை எடுத்துக்கொண்டு போய்ப் புதுக்கோட்டைத் தபால் நிலையத்தில் சேர்த்தான்.

4. புதுக்கோட்டைத் தபால் நிலைய அலுவலர் கடிதப் பையை அவிழ்த்துக் கடிதங்களை எடுத்து, அவ்வூர்த் தபால் தேதி முத்திரையை இட்டார் ;

பின்பு, விருதுநகருக்குச் செல்லவேண்டிய கடிதங்களையெல்லாம் ஒரு பையில் இட்டுக் கட்டினார்.



கடிதப் பையை அங்கிருந்து மோட்டார் மூலம் பாளையங்கோட்டைக்கு அனுப்பினார். பாளையங்கோட்டையிலேதான் திருநெல்வேலி மாவட்டத்தின் தலைமைத் தபால் நிலையம் இருக்கின்றது.




5. தலைமைத் தபால் நிலையத்தில் கடிதங்களைப் பைகளிற்கட்டி, முத்திரையிட்டுப் புகை

வண்டி நிலையத்துக்கு அனுப்பினர்கள்? அங்கிருந்து புகை வண்டித் தொடர் விருதுநகருக்குக் கடிதங்களைக் கொண்டு சென்றது. புகைவண்டித் தொடரில் 'தபால் வண்டி' என்னும் வண்டியிலேதான் கடிதப் பைகள் இருந்தன.

6. புகை வண்டித் தொடர் விருது நகர் சென்றதும், அங்கிருந்து கடிதப் பைகளைத் தபால் நிலையத்துக்கு எடுத்துச் சென்றுர்கள். தபால் அதிகாரி கடிதங்களின்மீது அவ்வூர்த் தபால் தேதி முத்திரை இட்ட பின், தபாற்சேவகர் அக்கடிதங்களை எடுத்துக்கொண்டு சென்றுர். அவர் முனிசிபல் உயர்தரப் பள்ளிக்கூட ஆசிரியர் அரங்கநாதரிடம் என்னைக் கொடுத்தார். என் பயணமும் முடிந்தது.

சொற்கள் :

| | | |
|---|---|---|
| பயணம் | உறை | முத்திரைத்தலை |
| ஒட்டி | முத்திரை | அரக்கு |
| கடிதப்பை | புகை வண்டி | சேவகர் |

கேள்விகள் :

1. அனவரதன் கடிதம் எழுதியதும் என்ன செய்தான்?

2. கடிதம் பாளையங்கோட்டைக்கு எப்படிச் சென்றது?

3. கடிதம் பாளையங்கோட்டையிலிருந்து விருது நகருக்குச் செல்லும் விதம் யாது?

**பயிற்சி :**

1. சேர்த்தெழுது :—

அ+ஊர் = அவ்வூர்

அ+ஆறு = ———

அ+ஓடம் = ———

அ+உரம் = ———

2. பிரித்தெழுது :—

அங்கிருந்து = அங்கு + இருந்து

பார்த்திருந்து = ——— + ———

மொழிக்குரிய = ——— + ———

வேறெதுவும் = ——— + ———

3. சேர்த்தெழுது :—

எடுத்து + சென்ருன் = ———

பையை + கயிற்றிஞல் = ———

விருதுநகருக்கு + கடிதங்கள் = ———

4. புரு—இது ஒரு பொருளைக் குறிக்கும் பெயர்; ஆதலின், ஒருமைப் பெயர்.

புருக்கள்—இது ஒன்றுக்கு அதிகமானவற்றைக் குறிக்கும் பெயராதலின், பன்மைப் பெயர்.

மலை, மரம், அரசன், அவன்—இவற்றிற்குப் பன்மைப் பெயர்கள் எழுது.

## 11. கூடித் தொழில் செய்க

கூடித் தொழில்செய்தோர்
கொள்ளைலா பம்பெற்றுர்;
வாடிடும் பேதத்தால்
வாய்ப்பதுண்டோ தோழர்களே! 1

நாடிய ஓர்தொழிலில்
நாட்டார் பலர்சேர்ந்தால்
கேடில்லை நன்மை
கிடைக்கும்அன்றோ தோழர்களே! 2

சிறுமுதலால் லாபம்
சிறிதாகும்; ஆயிரம்பேர்
உறுமுதலால் லாபம்
உயருமன்றோ தோழர்களே 3

பற்பலபேர் சேர்க்கை
பலம்சேர்க்கும்; செய்தொழிலில்
முற்போக்கும் உண்டாகும்
முன்னிடுவீர் தோழர்களே! 4

நாடெங்கும் வாழ்வதனுல்
கேடொன்றும் இல்லைஎனும்
பாடம் அதைஉணர்ந்தால்
பயன்பெறலாம் தோழர்களே! 5

சந்தைக் கடையோநம்
தாய்நாடு? லட்சம்பேர்
சிந்தைவைத்தால் நம்தொழிலும்
சிறப்படையும் தோழர்களே! 6

வாடித் தொழிலின்றி
வறுமையால் சாவதெல்லாம்
கூடித் தொழிலில்செய்யாக்
குற்றத்தால் தோழர்களே ! 7
கூடித் தொழில்செய்யாக்
குற்றத்தால் இன்றுவரை
மூடிய தொழிற்சாலை
முக்கோடி தோழர்களே ! 8

சொற்கள் :

| | | | |
|---|---|---|---|
| கூடி | நாடிய | சிறுமுதல் | செய்தொழில் |
| கேடு | வாடிடும் | கொள்ளை | லாபம் |
| நாடெங்கும் | முற்போக்கு | சந்தை | சிந்தை |
| கடை | வறுமை | குற்றம் | தொழிற்சாலை |
| முக்கோடி | மூடிய | பயன் | பாடம் |
| முன்னிடு | உருவம் | உணர்ந்தால் | சிறப்பு |

கேள்விகள்

1. யார் கொள்ளை லாபம் பெற்றார் ?
2. தொழில் செய்வதில் எப்போது நன்மை கிடைக்கும் ?
3. தொழிலில் எப்போது சிறப்படையலாம் ?
4. மக்கள் வறுமையால் ஏன் சாகின்றார்கள் ?
5. தொழிற்சாலைகள் ஏன் மூடப்பட்டன ?

பயிற்சி :

1. இரு பொருள் எழுது :—கொள்ளை, நாடு, உறு.
2. எதிர்ச்சொல் எழுது :—நன்மை, பலர், இல்லை.
3. பிரித்தெழுது :—பற்பல, கேடொன்றும், முக்கோடி.
4. மூடிய தொழிற்சாலை—'மூடிய' என்ற வினைச்சொல் 'தொழிற்சாலை' என்று பெயர்ச்சொல்லைக் கொண்டு முடிவதனால், இது பெயரெச்சம் எனப்படும். பெயரெச்சத்தின் பின் கசதப என்ற எழுத்துக்கள் மிகா.
சேர்த்தெழுது :—ஓடின + குதிரை = ——
எழுதிய + கடிதம் = ——



## 12. கயிறு திரித்தல்

1. தேங்காய் மட்டை நாருக்குச் சவுரி என்பது பெயர். சவுரியினல் கயிறு, மிதிபாய் முதலியன செய்கிருர்கள். தேங்காய்ச் சவுரியிலிருந்து எவ்வாறு கயிறு திரிக்கிருர்கள் என்பதைப் பற்றிப் படிப்போம்.

2. தேங்காய்ச் சவுரியைத் தண்ணீரில் பல நாள் வரை ஊறவைக்கவேண்டும். நன்ருக ஊரிய பின் அதை எடுத்துக் கல்லின்மீது வைத்து நன்ருகத் தட்ட வேண்டும். நன்ருகத் தட்டிக்கொண்டேயிருந்தால், சவுரிகள் நுண்ணிய நார்களாகவும் சிறிது தடித்த நார்களாகவும் பிரியும். அந்த நார்களே வேருகக் கட்டித் தனியிடத்தில் வைப்பார்கள்.

3. இரண்டடி நீளமுள்ள இரண்டு கழிகளே

எடுத்து அவற்றில், ஒன்றின் ஓரத்தில் ஒரு துளையும், அரையடித் தூரத்தில் மற்ரொரு துளையும், செய்துகொள்வர். அரையடித் தூரத்தில் செய்யப்பட்ட துளையினுள் மற்றக் கழியைத் துளையுள்ள கழி சுழலும்படி அமைத்துக்கொள்வர்.

4. படத்திற் காட்டியபடி ஒருவன் கழியைக் கையிற் பிடித்துக்கொள்ளுவான். மற்ரொருவன் சவுரியிலிருந்து எடுக்கப்பட்ட நார்களைக் கையால் ஓர் அடி அல்லது இரண்டடி நீளம் திரித்து, திரித்த கயிற்றின் ஒரு நுனியைக் கழியின் துளையினுள் செலுத்தி முடிச்சு இடுவான்.

5. கயிறு துளையினுள் செலுத்தப்பட்டவுடன் கழியைப் பிடித்திருப்பவன் கழியைச் சுழற்றுவான். கழியைச் சுழற்றுவதால் கயிறு முறுக்கேறும். மற்றவன் அக்கயிற்றுடன் வேறு நார்களைச் சேர்த்துக்கொண்டே யிருப்பான். கழியை வைத்திருப்பவன் அதைச் சுழற்றிக்கொண்டே பின்னேக்கிச் செல்வான். கயிறு முறுக்கேறி நீளமாகிக்கொண்டே வரும்.

6. மக்கள் இவ்வாறு கயிறு திரிக்கும் முறையைக் கற்றுக்கொள்வதனல், ஓய்வு நேரத்தில் இத்தொழிலைச் செய்து வரலாம். பள்ளிக்கூடச் சிறுவர்களும் இக்கைத்தொழிலைக் கற்றுக்கொள்ளலாம்.

சொற்கள் :

| | | |
|---|---|---|
| கற்றுக்கொள் | திரித்தல் | ஊற வை |
| மிதிபாய் | நுண்ணிய | நார் |
| முறுக்கேறும் | சவுரி | சுழற்று |
| மட்டை | மக்கள் | தொழில்கள் |

## கேள்விகள் :

1. கயிறு எதனுல் திரிக்கப்படுகின்றது?
2. கயிறு திரிக்குமுன் செய்ய வேண்டுவது என்ன?
3. நார்களை எங்கே ஊற வைக்கின்றனர்?
4. கயிறு திரிப்பதற்கு வேண்டும் கருவிகள் யாவை?

## இலக்கணம் :

இராமன், கோபாலன்—இவை ஆண்மகனைக் குறிப்பதால், ஆண்பாற்பெயர்.

அவள், மகள், மனைவி—இவை பெண்களைக் குறிப்பதால், பெண்பாற்பெயர்.

மனிதர்—இது பலரைக் குறிப்பதால், பலற்பாற்பெயர்.

(1) இராமன் ஓடினுன் — இவ்வாக்கியத்திலுள்ள எழுவாய், பயனிலைகளை எழுது.

இராமன்—ஆண்பாலைத் தெரிவிக்கும் எழுவாய்.

ஓடினுன்—ஆண்பால் செயலைத் தெரிவிக்கும் பயனிலை.

(2) பசு ஓடினது—பசு—ஒருமையைத் தெரிவிக்கும் எழுவாய்.

ஓடினது—ஒருமையைத் தெரிவிக்கும் பயனிலை.

பசுக்கள் ஓடின—பசுக்கள்—பன்மையைத் தெரிவிக்கும் எழுவாய்.

ஓடின—பன்மையைத் தெரிவிக்கும் பயனிலை.

எழுவாய் பயனிலைகள், பால், எண் இவற்றில் ஒத்திருக்க வேண்டும்.

குறிப்பு :—மனிதர் அல்லாத உயிர்கள் யாவும் ஆண் பெண் என்று பிரித்துப் பால் கூறப்படுவதில்லை. ஒருமை பன்மை என்னும் பிரிவுகளே அவைகளில் உண்டு.

பசு—ஒருமை—ஒன்றன் பால்.

பசுக்கள்—பன்மை—பலவின் பால்.

# 13. இன்பப் பயணம்–I

1. எங்கள் ஊர் **மங்களபுரி**. அவ்வூரில் தொடக்கப்பள்ளி இருக்கின்றது. எங்கள் ஆசிரியர், எங்களை மதுரைக்கு அழைத்துச் சென்றனர். இருபது மாணவர்களும் ஆசிரியரும் மதுரைக்குச் சென்றோம்.

2. எங்கள் ஊர் வழியாகப் பாளையங்கோட்டைக்குச் செல்லும் மோட்டாரில் ஏறினோம். அது சுமார் காலை ஒன்பது மணிக்கு எங்கள் ஊரிலிருந்து புறப்பட்டது. நாங்கள் பன்னிரண்டு மணிக்குப் பாளையங்கோட்டையைச் சேர்ந்தோம். அங்கிருந்து மற்றொரு மோட்டாரில் ஏறிப் புகை வண்டி நிலையத்தை அடைந்தோம். எங்கள் ஆசிரியர் குறைந்த கட்டணப் பாரத்தைப் பூர்த்தி செய்து கொடுத்து, எங்களுக்கு டிக்கட்டு வாங்கினார். நாங்கள் புகை வண்டி நிலையத்தில் இருக்கும் சிற்றுண்டிச் சாலையில் பகல் உணவு கொண்டோம். பின்பு, புகை வண்டித் தொடரிலுள்ள மூன்றாம் வகுப்பு வண்டியில் ஏறியமர்ந்தோம். புகை வண்டி ஒன்றரை மணிக்குப் புறப்பட்டது.

3. நாங்கள் இதற்கு முன் புகை வண்டியில் பயணம் செய்ததே இல்லை. அதனால், எங்களுக்கு அப்பயணம் மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. வழியில் பயிர்கள் வளர்ந்து செழித்துக் காணப்பட்டன. மரங்களும் தந்திக் கம்பிகளும் ஓடுவது போலக் காணப்பட்டன. வண்டி பாலங்களைக் கடந்து செல்லும் போது கடகடவென்ற சத்தம் எங்கள் செவிக்கு இன்பம் தந்தது.

நிலையங்களில் வண்டி நின்றதும் மக்கள் ஓடிவந்து வண்டியில் ஏறுவதும் இறங்குவதும் எங்களுக்கு வேடிக்கையாய் இருந்தன. நேரம் கழிந்ததே எங்களுக்குத் தெரியவில்லை. சுமார் ஆறு மணிக்கு மதுரையை அடைந்தோம்.

4. நாங்கள் வரிசையாக ஆசிரியர் பின்னே வண்டியிலிருந்து இறங்கினோம். பாலத்தின்மீது ஏறிப் புகைவண்டி நிலையத்தைக் கடந்து வெளியே வந்தோம். மதுரையின் பெருமையைப் புத்தகங்-களில் வாசித்த எங்களுக்கு மதுரையைக் கண்ட-தும் அளவற்ற மகிழ்ச்சி ஏற்பட்டது.

5. புகைவண்டி நிலையத்துக்கு எதிரே உள்ள பாதை வழியாக இராணி மங்கம்மாள் சத்திரத்-துக்குச் சென்றோம். அங்குச் சத்திரக் கணக்கர் நாங்கள் தங்க மூன்று அறைகளை எங்களுக்கு அளித்தனர். நாங்கள் எங்கள் சாமான்களை அவ்-வறைகளில் வைத்துப் பூட்டிக்கொண்டு, மதுரைக் கடைத்தெருவிற்குச் சென்று, கடைகளைக் கண்டு களித்தோம்; பின்பு சத்திரத்திற்கு வந்து சாப்-பிட்டுவிட்டுத் தூங்கச் சென்றோம்.

6. மறு நாள் அதிகாலையில் எழுந்து குளித்து-விட்டு, மதுரை நகரைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டோம். எங்கள் ஆசிரியர் மதுரையின் வரலாற்றை எங்களுக்குச் சொல்லிக்கொண்டே வந்தார்.

# 14. இன்பப் பயணம்–II

1. மதுரை பழமையான நகரம். முன் காலத்தில் அது வியாபாரத்திலும், கைத்தொழிலிலும் சிறந்து இருந்தது. அயல் நாட்டு வணிகர் வாணிபத்துக்காக அங்கு வந்தனர். அப்பொழுது **கொற்கை, காவிரிப்பூம்பட்டினம்,** முசிறி என்பவை தமிழ் நாட்டுத் துறைமுகங்களாயிருந்தன. மதுரை கடலிலிருந்து சிறிது தூரத்தில் இருந்தது. அதைச் சுற்றி உயரமான ஒரு மதிலும், மதிலேயடுத்து ஆழமான அகழியும் இருந்தன. அதற்கு நான்கு வாயில்கள் இருந்தன. ஒவ்வொரு வாயிலிலும் ஒவ்வொரு பெரிய கோபுரம் இருந்தது.

2. மதுரையில் பாண்டிய அரசர் ஆண்டு வந்தனர். அவர்கள் தமிழ்ப் புலவர்களை ஒன்று திரட்டித் **தமிழ்ச்சங்கம்** ஏற்படுத்தினர்கள். அப்புலவர்கள் **சங்கப்புலவர்கள்** என்று வழங்கப்பட்டார்கள். மதுரையில் ஒன்றன் பின் ஒன்றுக மூன்று தமிழ்ச் சங்கங்கள் நடைபெற்றன.

3. இவ்வளவு சிறப்புள்ள மதுரை கடலில் மூழ்கிவிட்டது. அந்நகரிலுள்ளவர்கள் மேற்கில் சென்று, ஒரு புதிய நகரை உண்டாக்கினர்கள். அதுவே இப்பொழுதுள்ள மதுரை.

4. புது மதுரையும் அழகான பட்டணமே. இதில் பல உயர்ந்த கட்டடங்கள் இருக்கின்றன. இங்குள்ள **திருமலை நாயக்கர் மகால்** மிகவும் சிறந்தது. அதில் உள்ள பெரிய பெரிய தூண்களும், விசாலமான முற்றமும், உயர்ந்த சுவர்களும் எங்களுக்கு வியப்பை அளித்தன. **மீனுட்சியம்மன்**

கோவிலும், அதை அடுத்துள்ள **புதுமண்டபமும்** மிக அழகானவை! அங்கு நாங்கள் யானைகளையும், வாணிகப் பொருள்களையும் கண்டு வியப்பும், களிப்பும் கொண்டோம்.



5. புது மண்டபம் முந்நூறு அடிக்கு மேல் நீளமுள்ளது. அதைச் சுற்றி ஓர் அகழி இருக்கின்றது. அந்த மண்டபத்தைக் கட்ட இருபது லட்சம் பொன் செலவானதாம். அதைக் கட்டி முடிக்க இருபத்திரண்டு ஆண்டுகள் சென்றனவாம்.

6. மதுரையிலுள்ள **மாரியம்மன் தெப்பக்-**

குளம் மிகப் பெரியது. அதன் நடுவில் ஒரு கோவில் இருக்கிறது. கோவிலைச் சுற்றி ஓர் அழகிய தோட்டம் இருக்கிறது. அதில் மா, பலா, வாழை, தென்னை முதலிய மரங்கள் இருக்கின்றன.

7. மதுரையில் நெசவுத் தொழில் அதிகம். சௌராட்டிரர்கள் அத்தொழிலைச் செய்கிறார்கள். அவர்கள் பட்டும் சரிகையும் கலந்த வேட்டிகளும், புடைவைகளும் நெய்கின்றார்கள். மதுரையில் புடைவைக் கடைகள் அதிகம். அங்கு அமெரிக்கன் கல்லூரி, மதுரைக் கல்லூரி, தியாகராயர் கல்லூரி என்னும் மூன்று கல்லூரிகளும், பெண்களுக்கென டோக்கு அம்மையார் கல்லூரியும், பல உயர்நிலைப் பள்ளிகளும் இருக்கின்றன.

8. மதுரையில் காண்பதற்கு உரியவற்றைக் கண்டு களித்தபின், நாங்கள் மறுநாள் காலையில் அங்கிருந்து புறப்பட்டோம். திருப்பரங்குன்றம், திருமங்கலம், விருதுநகர் முதலிய இடங்களையும் பார்த்துவிட்டுப் புகைவண்டித் தொடரில் திருநெல்வேலிக்கு வந்தோம். அங்கிருந்து எங்களூருக்கு மோட்டாரில் வந்து சேர்ந்தோம்.

9. இவ்வாறு சனவரி மாதம் இருபதாம் தேதி எங்கள் ஊரிலிருந்து புறப்பட்ட நாங்கள், இருபத்து நான்காம் தேதி மாலை எங்கள் ஊருக்குத் திரும்பினோம். எங்களை இன்பப் பயணம் அழைத்துச் சென்ற எங்கள் ஆசிரியருக்கு நாங்கள் நன்றி செலுத்தினோம்.

### சொற்கள் :

| | | |
|---|---|---|
| டிக்கட்டு | சிற்றுண்டி | சரிகை |
| தந்திக்கம்பி | பாலங்கள் | கட்டணம் |
| சத்திரம் | கணக்கர் | களித்தோம் |
| வரலாறு | கொற்கை | அகழி |
| துறைமுகம் | மதில் | நடைபெற்றன |
| வாயில்கள் | கோபுரம் | முற்றம் |
| மூழ்கி | கட்டடங்கள் | நெசவு |
| மண்டபம் | தெப்பக்குளம் | புடைவை |
| பட்டு | வியப்பு | பட்டணம் |

### கேள்விகள் :

1. ஆசிரியரும் மாணவரும் மங்களபுரியிலிருந்து புகை வண்டி நிலையத்திற்கு எதில் பயணம் செய்தனர்?
2. திருநெல்வேலியிலிருந்து மதுரைக்குச் செல்லும் வழியில் அவர்கள் கண்டவை யாவை?
3. முதல் நாள் மதுரையில் அவர்கள் கண்டவை யாவை?
4. மதுரையில் அவர்கள் பார்த்த பெரிய கட்டடம் எது?
5. மதுரையிலுள்ள பெரிய தெப்பக்குளத்தைப் பற்றி உனக்கு என்ன தெரியும்?
6. மதுரையிலுள்ள கல்லூரிகள் எவை?
7. திரும்பும் வழியில் அவர்கள் பார்த்த ஊர்கள் எவை?

### பயிற்சி :

1. ஆசிரியர் மதுரையைப்பற்றிக் கூறியவற்றைப் பதினைந்து வரிகளில் எழுது.
2. கீழ் வரும் சொற்கள் இன்ன பெயர்ச்சொற்கள் என்பதை எழுது :—

காலை, பாளையங்கோட்டை, நிலையம், உணவு, பகல், பெருமை, சத்திரம், வணிகர்.

3. கொடுக்கப்பட்ட சொற்களுக்கு எதிர்ச்சொற்களைக் கொண்டு கோடிட்ட இடத்தை நிரப்பு :—

ஏறுவது × இறங்குவது
உயர்வு ——
இரவு ——
காலை ——
பழமையான ——

4. ஒரே பொருள் உள்ள வேறு சொல் தொடர்களை எழுது :—

(1) தூங்கச் சென்றோம்—உறங்கப் போனோம்.
(2) வியப்பை அளித்தன ——————
(3) சங்கங்கள் நடைபெற்றன ——————

### இலக்கணம் :

அவர்கள் நெய்கின்றார்கள் - எழுவாயும் பயனிலையும் பன்மை. ஆசிரியர் கூறினர் - எழுவாய் ஒருமை; பயனிலை பன்மை. எழுவாய் பயனிலைகள் எண், பால் இவற்றில் ஒத்திருக்க வேண்டும். இரண்டாம் வாக்கியத்தில், ஆசிரியர் - ஒரு பொருள் - ஒருமை எழுவாய்; பயனிலை - கூறினர் - பன்மைப் பயனிலை. இது வாக்கியப் பிழை. ஆயினும், தமிழில் உயர்வு கருதி, ஆண்பால் பெண்பால் ஒருமையைப் பன்மையாகக் கூறுவது வழக்கம். இது உயர்வு அல்லது மரியாதைப் பன்மை எனப்படும்.

# 15. செந்தமிழ் நாடு

செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
        தேன்வந்து பாயுது காதினிலே !—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே—ஒரு
        சக்தி பிறக்குது மூச்சினிலே ! 1

காவிரி தென்பெண்ணை பாலாறு—தமிழ்
        கண்டதோர் வையை பொருனை நதி—என
மேவிய ஆறு பலஓடத்—திரு
        மேனி செழித்த தமிழ்நாடு. 2

கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்
        கம்பன் பிறந்த தமிழ்நாடு—நல்ல
பல்வித மாயின சாத்திரத் தின்மணம்
        பாரெங்கும் வீசும் தமிழ்நாடு. 3

வள்ளுவன் தன்னை உலகினுக் கேதந்து
        வான்புகழ் கொண்ட தமிழ்நாடு—நெஞ்சை
அள்ளும் சிலப்பதி காரமென் றோர்மணி
        ஆரம் படைத்த தமிழ்நாடு. 4

—சி. சுப்பிரமணிய பாரதியார்

சொற்கள் :

| | | | |
|---|---|---|---|
| செந்தமிழ் | இன்பத்தேன் | பாயுது | காது |
| தந்தை | பேச்சு | மூச்சு | சக்தி |
| காவிரி | தென்பெண்ணை | பாலாறு | பொருனை |
| கல்வி | சாத்திரம் | மணம் | மேனி |
| வள்ளுவன் | புகழ் | சிலப்பதிகாரம் | மணி |
| ஆரம் | படை | செழித்த | வையை |

### கேள்விகள் :

1. தமிழ் மக்களுக்கு இன்பம் எப்போது உண்டாகும் ?

2. அவர்களுக்கு எதனுல் சக்தி பிறக்கின்றது ?

3. தமிழ் நாட்டில் பாயும் ஆறுகள் எவை ?

4. தமிழ் நாட்டில் பிறந்த புலவர்கள் யார் ?

5. சிறந்த தமிழ் நூல்கள் இரண்டு எவை ?

### பயிற்சி :

1. பாயுது, பிறக்குது—இவற்றை எவ்வாறு எழுத வேண்டும் ?

2. பிரித்தெழுது :—

செந்தமிழ்=செம்மை+தமிழ்
செந்நிறம்= —— ——
செங்கால் = —— ——

### இலக்கணம் :

கூறு என்பது வினைச்சொல்.

கூறிய சொல்—இதில் பெயரைக் கொண்டு முடியும் கூறிய என்பது பெயரெச்சம்.

கூறிச் சென்ருன்—இதில் வினைச்சொல்லேக்கொண்டு முடியும், கூறி என்பது வினையெச்சம்.

# 16. பெருந்தன்மை

1. **ஆர்க்காட்டுக்கு** நான்கு மைல் தொலைவிலுள்ளது **லாலா பேட்டை** என்னும் ஊர். அவ்வூரில் வசித்தவர் **கோவிந்தராகவ ஐயர்** என்னும் பெரியார். அவர் ஏழைகளின் மீது இரக்கம் உள்ளவர்; பெரிய செல்வர்; ஆயினும் செல்வர் என்ற செருக்கு இல்லாதவர். அவர் தம் வீட்டுக்கு வரும் எளியவர்களையும் மரியாதையுடன் வரவேற்பார்; எளிய மாணவருக்கும் உதவி செய்வார்.

2. அவர் வீட்டில் **மணியன்** என்னும் வேலைக்காரன் இருந்தான். அவன் அவ்வீட்டில் பத்து ஆண்டுகள் உண்மையுடன் உழைத்து வந்தான். அவனிடம் அவ்வீட்டார் யாவரும் அன்பு வைத்திருந்தனர்.

3. ஒரு நாள் அவ்வீட்டில் தங்கச் சங்கிலி ஒன்று காணமற் போய்விட்டது. எல்லாரும் அதைத் தேடினர். வீடு முழுவதும் தேடிப் பார்த்தும், அது கிடைக்கவில்லை. சிலர் தோட்டத்திலும் தேடினர். அங்கும் அதைக் காணவில்லை. மேசைகள், அலமாரிகள் யாவும் ஆராயப்பட்டன. மணியனும் தேடினன். பலன் இல்லை. அதைப்பற்றிச் சில நாட்களில் யாவரும் மறந்துவிட்டனர்.

4. சில நாட்களுக்குப் பின், மணியன் ஊரிலுள்ள தன் தாயைப் பார்க்க விரும்புவதாகக் கூறினன். ஐயர் அவனுக்கு அனுமதி அளித்து, இருபது ரூபாயும் கொடுத்தார். அவன் மகிழ்வுடன் வெளியே சென்றான்.

5. மணியன் கடைத் தெருவுக்குச் சென்று,

காசுக் கடைக்காரரிடம் ஒரு சங்கிலியைக் கொடுத்-தான். அவர் அச்சங்கிலியின் நிறை எவ்வளவு என்று கேட்டார். அவன், 'எனக்குத் தெரியாது,' என்ருன். அவருக்கு ஐயம் உண்டாயிற்று. அவர் உண்மையை அறிய விரும்பினர்; அவ-னிடம் பேச்சுக் கொடுத்துக்கொண்டே, போலீசு சேவகனே அழைத்துவர ஓர் ஆளை அனுப்பினர். போலீசு சேவகனைக் கண்டு மணியன் ஓட முயன்-ருன். அவனைப் போலீசு சேவகன் பிடித்துக்-கொண்டான்.

6. அவன் மணியனை இன்ஸ்பெக்டரிடம் அழைத்துப் போனுன். மணியன் இன்ஸ்பெக்ட-ரிடம் அச்சங்கிலியைத் தனக்குக் கோவிந்த ராகவ ஐயர் கொடுத்தார் எனக் கூறினுன். அவன் சொன்னது உண்மைதானு என்பதை அறிந்துவர இன்ஸ்பெக்டர் மணியனுடன் ஒரு போலீசு சேவகனை அனுப்பினர்.

7. அவர்கள் கோவிந்த ராகவ ஐயர் வீட்டுக்-குச் சென்ருர்கள். ஐயர் அவர்களைக் கண்டதும் போலீசு சேவகனை நோக்கி, 'என்ன செய்தி?' என்ருர். போலீசு சேவகன், 'இந்தச் தங்கச் சங்கிலி உங்களுடையதுதானு? இதை நீங்கள் இவருக்குக் கொடுத்தீர்களா?' என்று கேட்டு, நடந்தவற்றைக் கூறினுன். அதைக் கேட்ட ஐயர், 'மணியன் சொல்லியது உண்மைதான்; அவ-னுக்கு நானே இதைக் கொடுத்தேன்; நீ ஐயப்-படக் காரணம் என்ன?' என்ருர். மணியனுக்கு இதைக் கேட்டதும் வியப்பு உண்டாயிற்று. அவனுக்கு வெட்கம் ஏற்பட்டது. அவன் தலை குனிந்து நின்ருன்.

8. போலீசு சேவகன், 'நீங்கள் கொடுத்த-தாகத்தான் சொன்னார்; ஆயினும், இவர் செய்கை எங்களுக்கு ஐயத்தை உண்டாக்கியது,' என்று கூறி ஐயரிடம் சங்கிலியைக் கொடுத்துவிட்டுப் போய்விட்டான்.

9. ஐயர் மணியனுக்கு நல்லுரைகள் கூறினார். அன்று முதல் மணியன் நல்லவனாய் மாறிவிட்-டான்; ஐயரது பெருந்தன்மையை எண்ணி எண்ணி அவரை வாயாரப் புகழ்ந்தான்.

சொற்கள் :

| | | |
|---|---|---|
| அலமாரி | வாயார | இன்ஸ்பெக்டர் |
| எடை | தங்கச் சங்கிலி | நிறை |
| வெட்கம் | ஆராயப்பட்டன | ஐயம் |

கேள்விகள் :

1. கோவிந்த ராகவ ஐயர் எப்படிப்பட்டவர்?
2. மணியன் செய்த குற்றம் என்ன?
3. அவன் குற்றம் ஐயருக்கு எப்படித் தெரிந்தது?
4. மணியனே திருடியவன் என்று அறிந்தும் ஐயர் என்ன செய்தார்?
5. மணியன் பின்பு எப்படி நடந்தான்?

பயிற்சி :

1. ஒரே பொருளுள்ள சொற்களை ஒன்றுக்குப் பின் ஒன்றாக எழுது :—

   நிறை, எடை, வியப்பாக, செயல், செய்கை.

2. ஐயர் கூறினார்.—இது என்ன பன்மை?

இலக்கணம் :

அவன் கூறினான்—'கூறினான்' என்ற வினைச்சொல் பொருள் முடிந்து நிற்கின்றது. அதனால், இது வினை முற்று எனப்படும்.

கூறினான்—இவ்வினைமுற்றை வினையெச்சமாகவும், பெயரெச்சமாகவும் மாற்று.

# 17. தேசத் தொண்டு

பல்லவி

தேசத் தொண்டுகள் செய்திடுவோம்
தெய்வம் துணைவரக் கைதொழுவோம்.

சரணங்கள்

நம்முடைய நாட்டை நாம்ஆள
நன்மைகள் முன்போல் இனிமீள
எம்முடைய ராச்சியம் இதுஎன்றே
இந்தியர் மகிழ்ந்திடச் சொந்தமென்றால் 1

பட்டினி கிடப்பவர் இல்லாமல்
படிக்கா தவர்எனச் சொல்லாமல்
எட்டின மட்டிலும் எல்லாரும்
இன்புறும் ராச்சியம் தென்படவே 2

பணத்தின் பெருமையைப் போக்கிவைப்போம்
பண்டங் களின்விலை தூக்கிவைப்போம்
குணத்தின் பெருமைகள் இல்லாத
குலமும் பிறஇனிச் செல்லாது. 3

மனிதனை மனிதன் ஏய்ப்பதையும்
மக்களைப் போரில் மாய்ப்பதையும்
தனியொரு வழியில் தடுத்திடஓர்
தருமம் உலகினில் தழைத்திடவே 4

—வெ. இராமலிங்கம் பிள்ளை

**சொற்கள் :**

| | | | |
|---|---|---|---|
| தொண்டு | தெய்வம் | துணை | தொழுவோம் |
| பண்டங்கள் | விலை | தூக்கு | குலம் |
| குணம் | பணம் | பெருமை | போர் |
| பட்டினி | ராச்சியம் | ஏய்ப்பது | மாய்ப்பது |
| ஆள | மீள | தனி | சொந்தம் |

**கேள்விகள் :**

1. சொந்த நாட்டை எவ்வாறு ஆள வேண்டும்?
2. இன்புறும் ராச்சியம் எப்போது தென்படும்?
3. நாட்டில் எதனைப் போக்க வேண்டும்?
4. எப்படிப்பட்ட குலம் இனிச் செல்லாது?
5. நாம் எவற்றைத் தடுத்திட வேண்டும்?

பயிற்சி :

1. எதிர்ச்சொல் எழுது :—படிக்காதவர், இன்புறும்.

2. பொருள் வேறுபாடு எழுது :—குலம், குளம்; தனி, தணி.

3. நாம் நம் நாட்டிற்குச் செய்யவேண்டிய தொண்டைப் பற்றி எழுது.

**இலக்கணம் :**

உலகத்திலுள்ள பொருள்கள் இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அவை உயர்திணை, அஃறிணை என்பன.

மனிதன்—உயர்ந்த பிரிவு—உயர்திணை.

விலங்கு, பறவை, கல், மண் முதலியன } உயர்வு அல்லாத பிரிவு (திணை) —அஃறிணை

| | ஒருமை | பன்மை | |
|---|---|---|---|
| **உயர்திணை** | அவன்—ஆண்பால். | அவர் | பலர் பால் |
| | அவள்—பெண்பால். | அவர்கள் | |

**அஃறிணை**—அது—ஒன்றன்பால். அவை—பலவின்பால்.

இவை படர்க்கை இடத்துக்கு உரியவை.



## 18. மூன்று மீன்கள்

1. ஒரு குளத்தில் மூன்று மீன்கள் வாழ்ந்தன. அவற்றின் பெயர் **வருமுன் காப்போன், வருங்கால் காப்போன், வந்தபின் காப்போன்** என்பன.

2. குளத்தில் தண்ணீர் வற்றத் தொடங்கியது. அதனால், அதிலுள்ள மீன்களைப் பிடிக்கச் சிலர் வந்தனர். அவர்கள் செம்படவர்கள். அவர்கள், "நாம் நாளைக்கு வந்து, இதில் வலை வீசி, இதில் இருக்கிற மீன்களைப் பிடிப்போம்," என்று பேசிக்கொண்டார்கள்.

3. செம்படவர்கள் பேசியதை வருமுன் காப்போன் கேட்டுவிட்டது. அது மற்ற மீன்களிடம் சென்று, "நண்பர்களே, நாம் இப்பொழுதே இக்குளத்தைவிட்டுப் போய்விட வேண்டும். செம்பட-

வர்கள் நாளை நம்மைப் பிடித்துக்கொள்வார்கள்,'' என்று கூறித் தான் கேட்டதைத் தெரிவித்தது.

4. அதைக் கேட்ட வருங்கால் காப்போன், "நமக்குத் தீங்கு வரும்போது பார்த்துக்கொள்வோம்,'' என்றது. வந்தபின் காப்போன், "நாம் நம் இடத்தை விட்டுவிடுவது பேதைமை; வருவது வந்தே தீரும்,'' என்று சொல்லிவிட்டு அங்கேயே இருந்தது. வரும்முன் காப்போன் வேறு குளத்துக்குப் போய்விட்டது.

5. மறுநாள் காலையில் செம்படவர்கள் வந்து வலை வீசினார்கள். வருங்கால் காப்போனும் வந்தபின் காப்போனும் வலையில் அகப்பட்டன. வருங்கால் காப்போன் செத்தாற்போலப் பாசாங்கு செய்தது. செம்படவர் அதைக் கரையில் எறிந்தனர். அது தண்ணீரில் குதித்துத் தப்பிவிட்டது. வந்தபின் காப்போன், "இப்போது என்ன செய்யலாம்?'' என்று எண்ணியது. அதற்கு ஒன்றும் தோன்றவில்லை. இங்கும் அங்கும் துள்ளியது. செம்படவன் ஒருவன் அதைத் தடியால் அடித்துக் கொன்றான்.

சொற்கள் :

| | | |
|---|---|---|
| காப்போன் | தொடங்கியது | வற்ற |
| செம்படவர் | நண்பர் | தெரிவி |
| தீங்கு | பேதைமை | மறுநாள் |
| வீசினார்கள் | எண்ணியது | குதித்து |
| தோன்றவில்லை | துள்ளியது | கொன்றான் |

## கேள்விகள் :

1. செம்படவர் என்ன பேசிக்கொண்டனர் ?
2. அவர்கள் பேசியதைக் கேட்டது எது ?
3. வருமுன் காப்போன் என்ன சொல்லிற்று ?
4. வந்த பின் காப்போன் ஏன் இறக்க நேரிட்டது ?

## பயிற்சி :

1. இக்கதையை வருமுன் காப்போனே சொல்வது போல் எழுது.

2. வந்து, வீசிப் பிடிப்போம்—வந்து, வீசி என்பன வினையெச்சங்கள். இவை தொடர்ந்து எழுதப்படும் போது காற்புள்ளி (,) இடவேண்டும்.

## இலக்கணம் :

மாணவன் நேற்றுப் பாடம் படித்தான்—படித்தான் என்ற வினைமுற்று, தொழில் முன்பு நடந்ததைத் தெரி-விக்கின்றது—இது இறந்த கால வினைமுற்று.

மாணவன் இன்று பாடம் படிக்கிறான்—படிக்கிறான் என்ற வினைமுற்று தொழில் இப்பொழுது நடக்கிறதைத் தெரிவிக்கின்றது—இது நிகழ்கால வினைமுற்று.

மாணவன் நாளை பாடம் படிப்பான்—படிப்பான் என்ற வினைமுற்று தொழில் இனிமேல் நடக்கப்போவதைத் தெரிவிக்கின்றது—இது எதிர்கால வினைமுற்று.

வினைச்சொல் இறந்தகாலம், நிகழ்காலம். எதிர்காலம் என்ற மூன்று காலங்களைத் தெரிவிக்கும்.

# 19. கரும்பு

1. நான் இனிப்பைத் தரும் பொருள். பொங்கல் பண்டிகையின் போது கடைகளில் என்னைக் கட்டுக்கட்டாக வைத்திருப்பர். என்னைத் துண்டு-துண்டாக வெட்டித் தின்பதில் சிறுவர்களுக்கு விருப்பம் மிகுதி. நான் இனிப்பாய் இருப்பதே அதற்குக் காரணம். என்னைப் பிழிந்துதான் சர்க்கரை செய்கின்றனர்.

2. என்னைக் கணுக்கணுவாக வெட்டிப் பூமியில் நடுவார்கள். சில நாட்களில் கணுக்களிலிருந்து தளிர்கள் தோன்ற, நான் நாணற்புல்லைப் போன்று நீளமாக வளருவேன். நான் வளரும் போதே பக்கங்களில், எனக்குச் சகோதரர் கிளைப்பர். என் சகோதரர்கள் ஆண்டுக்கு ஆண்டு சத்துக் குறைந்து கொண்டே வருவார்கள்.

3. நான் வளர்ந்து முற்றியபின், என்னைப் பிடுங்கித் துண்டு துண்டாக வெட்டி, அத்துண்டுகளைக் கரும்பாலையிலுள்ள பெரிய உருளைகளுக்கிடையில் செலுத்துவார்கள். உருளைகள் சுழல்வதால், துண்டுகள் நசுக்கப்பட்டு, அவற்றிலுள்ள சாருகிய நான் உருளைகளின் கீழ் வைக்கப்பட்டுள்ள பெரிய பாத்திரங்களில் விழுவேன். என்னைப் பெரிய பாத்திரங்களில் ஊற்றிக் காய்ச்சுவார்கள். காய்ச்சும்போதே சிறிது சுண்ணும்பு சேர்ப்பார்கள். சில இடங்களில் எலும்புத் தூளைச் சேர்ப்பதுமுண்டு. இவ்வாறு செய்வதால் என்னிடமுள்ள அழுக்கு மேலே திரண்டு வரும். அதை நீக்கிவிட்டால் நான் தூய்மையாவேன். என்னை நன்ருகக் காய்ச்சியபின் கீழே இறக்கிப் பெரிய தொட்டிகளில்

ஊற்றுவார்கள். நான் குளிர்ந்ததும் இறுகிக் கட்டி-யாவேன். இப்போது என்னைப் பழுப்புச் சர்க்-கரை என்பர். என்னை இன்னும் தூய்மை செய்-தால் வெள்ளைச் சர்க்கரை ஆவேன்.

4. என்னைச் சேர்ப்பதால் பொருள்களுக்கு இனிப்பு உண்டாகிறது. நான் செரிக்கும் ஆற்றலை மிகச் செய்வேன்.

### சொற்கள் :

| | | |
|---|---|---|
| இனிப்பான | கரும்பாலை | செலுத்து |
| பண்டிகை | சாறு | திரண்டு |
| நசுக்கப்பட்டு | காய்ச்சு | பழுப்பு |
| சுண்ணும்பு | தூள் | கிளைப்பர் |
| எலும்பு | நாணல் | அழுக்கு |
| தொட்டி | கணுக்கணுவாக | வெள்ளை |
| பொங்கல் | உருளை | சர்க்கரை |

### கேள்விகள் :

1. கரும்பு எவ்வாறு பயிரிடப்படுகிறது ?

2. கரும்பிலிருந்து சாறு எவ்வாறு எடுக்கப்படு-கின்றது ?

3. கருப்பஞ்சாற்றிலிருந்து சர்க்கரை எவ்வாறு செய்யப்படுகின்றது ?

4. சர்க்கரையினால் ஏற்படும் நன்மை என்ன ?

### பயிற்சி :

1. வாக்கியம் முடிவு பெற்றதைக் காட்ட முற்றுப்-புள்ளி இடவேண்டும். (.)

மாடு புல்லை மேய்ந்தது.

2. சொற்கள் அடுக்கி வரும்போது அடுக்கிய சொற்களைக் காற்புள்ளி இட்டுப் பிரிக்க வேண்டும். (,)

யானை, புலி, கரடி முதலியவை விலங்குகள்.



## 20. புத்தியுள்ள காகம்

தண்ணீர் கிடையாமல்—காகமொன்று
தவித்த வேளையிலே
மண்ணாற் செய்தஒரு—சாடியினை
வழியிற் கண்டதம்மா ! 1

சாடியின் மீதிருந்து—தலையைச்
சாய்ந்து நோக்கிடவே
சாடியி லேயடியில்—சற்றே
தண்ணீர் தெரிந்ததம்மா ! 2

காகம் உடன்பறந்து—சிறுசிறு
கற்கள் பொறுக்கிவந்தே
ஊகமாய்ச் சாடியினுள்—அவற்றை
ஒவ்வொன்றாய் இட்டதம்மா ! 3

இட்டிட வேநீரும்—மேலே
எழுந்து வந்ததம்மா!
சட்டமா கக்குடித்துக்—காகம்
தளர்ச்சி தீர்ந்ததம்மா! 4
ஊக்கம் உடையவர்க்குத்—துன்பம்
உலகிலே இல்லையம்மா!
ஆக்கம் பெருகுமம்மா!—இதைநீ
அறிய வேண்டுமம்மா! 5

**சொற்கள் :**

| | | | |
|---|---|---|---|
| தவித்து | அலைகையில் | சாடி | சாய்த்து |
| பொறுக்கி | ஒவ்வொன்றாய் | பறந்து | சட்டமாக |
| ஊக்கம் | ஆக்கம் | பெருகும் | அடி |

**கேள்விகள் :**

1. காகம் அலையக் காரணம் என்ன?
2. அது சாடியில் எதனைக் கண்டது?
3. தண்ணீர் மேலே வர அது செய்தது என்ன?
4. இக்கதையினால் நீ அறிவது என்ன?

**பயிற்சி :**

1. இரு பொருள் எழுது :—அலை, சாடி, சட்டம், அடி.

2. பிரித்தெழுது :—

| | | | |
|---|---|---|---|
| தவித்தலைகையில் | = | தவித்து + | அலைகையில் |
| மீதிருந்து | = | —— | —— |
| வந்ததம்மா | = | —— | —— |

3. இச்செய்யுட்களிலிருந்து நான்கு வினையெச்சங்களை எடுத்து எழுது.

4. இராமன், "நான் நாளைக்குப் பள்ளிக்கூடம் போவேன்," என்று சொன்னான்.

இராமன் கூறியதை அவன் கூறியபடியே எடுத்துக் காட்டிக் கூறுவதை 'நேர்க்கூற்று' என்பர். நேர்க்கூற்றுத் தொடங்கு முன்னும் முடிந்த பின்னும் இடப்படும் குறி 'மேற்கோள் குறி' ஆகும், (" ")



## 21. மானும் காகமும்

1. சண்பக வனத்தில் ஒரு மரத்தின் அடியில் ஒரு மானும் காகமும் நட்புடன் வாழ்ந்து வந்தன. அவை பகலில் இறை தேடி, இரவில் அங்கு வந்து தங்கும்.

2. மான் கொழுத்திருந்தது. அதைக் கண்ட நரி ஒன்று அதைக் கொன்று தின்ன எண்ணியது. அதனுல், அது மானுடன் நட்புக் கொண்டது. காகம் அதை விரும்பவில்லை.

3 ஒரு நாள் நரி மானை அழைத்துச்சென்று, பசுமையான பயிருள்ள கொல்லையைக் காட்டியது. மான் ஒவ்வொரு நாளும் அங்குச்சென்று மேய்ந்து வந்தது. கொல்லைக்குரியவன் இதைக் கவனித்து, வலையைக் கட்டினுன். வழக்கப்படி மேயச் சென்ற மான் வலையிற் சிக்கியது.

4. நரி அங்கு வந்தது. மான் வலையை அறுத்துத் தன்னை விடுவிக்கும்படி நரியை வேண்டியது. நரி அதைப் பார்த்து, "நண்பா, எனக்கு இன்று நோன்பு நாள்; அதனால், தோல் வலையை நான் இன்று கடிக்கமாட்டேன்," என்று சொல்லிற்று. பின்பு, அது பக்கத்திலுள்ள புதரில் ஒளிந்துகொண்டது.

5. வழக்கம்போல மான் வாராததைக் கண்ட காகம், அதைத் தேடிக்கொண்டு அங்கு வந்தது; மான் வலையில் அகப்பட்டிருப்பதைக் கண்டு, அதனிடம், "நண்பா, நீ செத்தவன் போலக் கிட. நான் உன் கண்களைப் பொய்யாகக் குத்துவேன். கொல்லைக்கு உரியவன் நீ செத்துவிட்டாய் என்று நினைத்து, வலையை அவிழ்ப்பான். அப்பொழுது நான் கத்துவேன். நீ ஓடிவிடு," என்று சொன்னது.

6. கொல்லைக்கு உரியவன் வந்தான். காகம் மானின் கண்களைப் பொய்யாகக் குத்தியது. அவன் மான் இறந்துவிட்டது என்று நினைத்தான். அவன் வலையை அவிழ்த்ததும் மான் ஓடியது. அவன் கையிலிருந்த தடியை வீசினான். அது குறி தவறிப் பதுங்கியிருந்த நரியின்மேற் பட்டது. நரி இறந்தது.

'வினை செய்தவன் வினை அறுப்பான்.'

## சொற்கள் :

| | | |
|---|---|---|
| சண்பகம் | சிக்கியது | பதுங்கு |
| கொழுத்து | புதர் | பசுமையான |
| மேயச் சென்ற | கத்துவேன் | கவனித்து |
| கடிக்க | வீசு | தோல் |
| அகப்படு | நட்பு | வலே |
| தடி | கொல்லே | தேடி |
| வனம் | வழக்கம் | கத்து |
| அழைத்து | அவிழ் | தவறி |

## கேள்விகள் :

1. மானும் காகமும் எங்கே வாழ்ந்தன ?
2. நரி மானுடன் ஏன் நட்புக் கொண்டது ?
3. நரி செய்த சூழ்ச்சி என்ன ?
4. மான் வலேயிற் சிக்கியது ஏன் ?
5. காகம் செய்த தந்திரம் யாது ?
6. நரியின் முடிவு யாது ?

## பயிற்சி :

1. 'வினே விதைத்தவன் வினே அறுப்பான்.' இந்தப் பழமொழிக்கேற்ற ஒரு கதை எழுது.

2. பொருள் வேறுபாட்டை எழுது :—

கொழுத்து, கொளுத்து ; கொல்லே, கொள்ளே.

3. ஏற்ற நிறுத்தக் குறிகளே இடு :—

நரி அதைப் பார்த்து நண்பா எனக்கு இன்று நோன்பு நாள் அதனுல் தோல் வலேயை நான் இன்று கடிக்கமாட்டேன் என்றது.



## 22. செல்வச் சிறுமியர்

பாகமா கச்செய்த பண்டமுண்போம்—நன்ருய்ப்
பக்குவம் ஆன பழங்களுண்போம்;
தாகமா ஞல்பல பானகமும்—தாயார்
தந்திட உண்டு மகிழ்ந்திடுவோம். 1

காலத்துக் கேற்ற உடையணிவோம்—வாசம்
கட்டிய சந்தனம் பூசிடுவோம்;
கோலமாய்ச் சீவிச் சிணுக்கெடுத்து—மலர்
கூந்தலிற் சூட்டி அழகு செய்வோம். 2

உன்னி எழும்ஊஞ்சல் ஆடிடுவோம்—கேட்போர்
உள்ளம் குளிரவே பாடிடுவோம்;
சின்னஞ் சிறுவீடு கட்டிடுவோம்—அதில்
சித்திர வேலைகள் செய்திடுவோம். 3

பத்துப் பசுக்களெம் வீட்டிலுண்டு ;—நல்ல
பாலுக்குக் கொஞ்சமும் பஞ்சமில்லை ;
நித்தம் சுகமாக வாழ்ந்திடுவோம் ;—இந்த
நீணிலத் தெம்மைஒப் பாருமுண்டோ ?

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

சொற்கள் :

| | | | |
|---|---|---|---|
| பாகம் | உண்போம் | பக்குவம் | ஒப்பார் |
| காலத்துக்கு | தாகம் | பானகம் | தாயார் |
| சந்தனம் | பூசு | அணிவோம் | சீவி |
| சிணுக்கெடு | கூந்தல் | கோலமாய் | உன்னி |
| ஊஞ்சல் | உள்ளம் | சூட்டி | பஞ்சம் |
| நித்தம் | நீணிலம் | சின்னஞ்சிறு | குளிர |

கேள்விகள் :

1. செல்வச் சிறுமியர் எவற்றை உண்பர் ?
2. அவர்கள் தங்களை எவ்வாறு அழகு செய்வார்கள் ?
3. அவர்கள் நேரத்தை எவ்வாறு கழிப்பார்கள் ?
4. அவர்களுக்கு ஏன் பாலுக்குப் பஞ்சமில்லை ?

பயிற்சி :

1. செல்வச் சிறுமியரைப் பற்றி ஐந்து வாக்கியங்கள் எழுது.

2. ‘உண்போம்’—இது என்ன கால வினை முற்று ? இறந்தகால, நிகழ்கால வினைமுற்ருக இதனை மாற்று.

3. சேர்த்து எழுதுக :—

பத்து + பசுக்கள் = —— ——
வீட்டில் + உண்டு = —— ——
நீள் + நிலம் = —— ——
சிணுக்கு + எடுத்து = —— ——

# 23. அறிவுள்ள அரசர்

1. பாலத்தீனம் என்பது நமது நாட்டிற்கு மேற்கில் உள்ள ஒரு நாடு. அங்கு முன் காலத்தில் யூதர் வாழ்ந்து வந்தனர். அவர்களை ஆண்டு வந்த அரசர்கள் மிகுந்த அறிவுள்ளவர்கள்; ஆண்மையுள்ளவர்கள்; கடவுள் அன்புள்ளவர்கள். அவர்களுள் தலைசிறந்தவர் சாலமோன் என்பவர். அவர் நுண்ணறிவு வாய்ந்தவர்; கடவுள் அருளால் நீதி வழங்கும் ஆற்றல் அமையப் பெற்றவர். அவரது புகழ் உலகமெங்கும் பரவியது.

2. பலர் சாலமோனைக் கண்டு அவரது அறிவுத் திறனை மெச்சிச் சென்றனர். அவர்களுள் சீபா நாட்டு அரசியும் ஒருத்தி. அவள் சாலமோன் அரசரைக் கண்டு, அவரது அறிவுத் திறனைத் தேர்ந்தறிய விரும்பினள். ஆதலின், அவள் சாலமோன் வாழ்ந்த எருசலேம் நகருக்கு வந்தனள். சாலமோன் அரசரும் அவளை வரவேற்று அமரச் செய்தனர்.

3. சீபா அரசி தன் கையில் இரண்டு மாலைகளை வைத்திருந்தாள். அம்மாலைகள் பார்ப்பதற்கு ஒன்றுபோல இருந்தன. ஆனல், அவற்றுள் ஒன்று அன்று மலர்ந்த மலர்களால் தொடுக்கப்பட்ட மாலை; மற்றொன்று, நெட்டியால் செய்த மாலை. அரசி அரசரைப் பார்த்து, "அரசே, நான் வைத்திருக்கும் இரு மாலைகளை நீர் பார்க்கின்றீர். இவற்றுள் ஒன்று இயற்கை மாலை; மற்றொன்று செயற்கை மாலை. நீர் தூரத்திலிருந்தே, இவற்றுள்

எது இயற்கை மாலை; எது செயற்கை மாலை என்பதைக் கூற இயலுமா?'' என்று கேட்டாள்.

4. அரசர் சிறிது நேரம் அவற்றை உற்றுப் பார்த்தார். அவருக்கு இரண்டும் இயற்கை மாலைகளாகவே காணப்பட்டன. அவர் என்ன செய்வார்! அவற்றைத் தெரிந்து கூருவிடின், அதுகாறும் அவர் தேடிய புகழ் மங்கிவிடும். அவர் சிறிது நேரம்



சிந்தித்தார்; ஏவலாளரை விளித்தார்; அரண்மனையில் தோட்டத்திற்கு நேரேயிருந்த பலகணிக் கதவுகளைத் திறந்துவிடக் கட்டளையிட்டார். சிறிது நேரத்தில் தோட்டத்திலிருந்த வண்டுகள் கூட்டமாய் அரண்மனையுள் புகுந்தன. அவை நேரே அரசியிடம் சென்றன. அவள் வைத்திருந்த இயற்கை மாலையிலுள்ள பூக்களைச் சுற்றி மொய்த்து ரீங்காரஞ் செய்தன.

5. அரசர் அரசியைப் பார்த்து, "அரசியாரே, இப்போது இயற்கை மாலை எது என்பதைச்

சொல்லிவிடலாமன்றோ?'' என்று கூறிச் சிரித்-தனர். அரசி அவரது நுண்ணறிவை வியந்து அவரை வாழ்த்திச் சென்றாள்.

### சொற்கள் :

| | | | |
|---|---|---|---|
| பாலத்தீனம் | ஆற்றல் | யூதர் | ஆண்டு |
| கடவுளன்பு | பரவு | புகழ் | ஆண்மை |
| நுண்ணறிவு | இயற்கை | மெச்சு | அமர |
| தலைசிறந்தவர் | இயலுமா | செயற்கை | நெட்டி |
| பலகணி | கட்டளை | புகுந்தன | நேரே |
| மொய்த்து | ரீங்காரம் | கூட்டமாய் | சுற்றி |

### கேள்விகள் :

1. சாலமோன் அரசர் எப்படிப்பட்டவர்?

2. சீபா நாட்டு அரசி எந்த நோக்கத்தோடு சால-மோனைக் காண வந்தாள்?

3. சாலமோன் இயற்கை மாலையைக் கண்டுகொள்ள யாது செய்தனர்?

4. இயற்கை மாலையைச் சுற்றி வண்டுகள் மொய்க்கக் காரணம் என்ன?



## 24. ஏழைச் சிறுமியர் புலம்பல்

நல்லபண் டங்களைக் கண்டறியோம்—ஒரு
நாளும் வயிறார உண்டறியோம்.
அல்லும் பகலும் அலைந்திடுவோம்—பசி
ஆற வழியின்றி வாடிடுவோம். 1

அன்னப்பால் காணாத ஏழைகட்கு—நல்ல
ஆவின்பால் எங்கே கிடைக்குமம்மா!
என்னப்பால் யாம்படும் பாட்டையெல்லாம்—சென்று
யாரிடம் சொல்லி அழுவோமம்மா! 2

சுற்றிய கந்தை ஒருமுழமாம்;—அதில்
தோன்றிய பீறலும் ஆயிரமாம்.
பற்றும் அழுக்கினைப் போக்கவென்றால்—உடை
பஞ்சுபஞ் சாகப் பறக்குமம்மா? 3

புண்ணும் சிரங்கும் நிறைந்ததம்மா !—அதில்
　　போட மருந்தும் கிடையாதம்மா !
கண்ணில் உறக்கமும் இல்லையம்மா !—எங்கள்
　　கட்டம் அறிபவர் உண்டோஅம்மா ! 4

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

சொற்கள் :

| | | |
|---|---|---|
| பாட்டை | போக்க | ஆவின் |
| பற்றும் | வயிறூர | பசியாற |
| பஞ்சு பஞ்சாக | சுற்றிய | முழம் |
| அல்லும் | தோன்றிய | பீறல் |
| பண்டங்கள் | சிரங்கு | புண் |

கேள்விகள் :

1. ஏழைச் சிறுமியர் எவற்றைக் கண்டறியார் ?
2. அவர்கள் எதனால் வாடுகின்றார்கள் ?
3. அவர்கள் எப்படிப்பட்ட ஆடை அணிந்திருப்பார்கள் ?
4. அவர்கள் ஆடையை ஏன் துவைப்பதில்லை ?
5. அவர்கள் உடலில் நிறைந்திருப்பது என்ன ?

பயிற்சி :

1. ஏழைகளின் துன்பத்தைத் தொகுத்து எழுது.
2. இரு பொருள் எழுது :—பாட்டை, போக்க.
3. ஐயோ ! என்ன துன்பம்.—இங்கு 'ஐயோ' என்ற சொல் இரக்கத்தை உணர்த்தும். இது மனத்தின் உணர்ச்சியைக் காட்டும். இதற்குப் பின் உணர்ச்சிக்குறி (!) இடவேண்டும்.

கோபம், வியப்பு, பயம், அருவருப்பு, மகிழ்ச்சி முதலியன உணர்ச்சிகளாம். இவற்றை உணர்த்தும் சொற்களுக்குப்பின் உணர்ச்சிக்குறி இடவேண்டும்.



## 25. அழி வழக்கு

1. ஓர் ஊரில் வயதான குரு ஒருவர் இருந்தார். அவர் உலக அறிவு இல்லாதவர். அதனல், அவரைப் **பரமார்த்த** குரு என மக்கள் வழங்கினுர்கள். அவருடைய மாணவர் ஐவர். அவர்களும் அறிவு இல்லாதவர்களே.

2. ஒரு நாள் அவர்கள் நெடுந்தொலேவிலுள்ள ஓர் ஊருக்குப் போவதற்காக, ஒரு மாட்டை வாடகைக்கு அமர்த்திக்கொண்டு வந்தார்கள்; அதன்மீது தங்கள் குருவை ஏற்றிவைத்தார்கள்.

3. அக்காலம் கடுவேனிற்காலம்; போகப் போக வெயில் வெப்பம் மிகுதியாயிற்று. குருவுக்கு வெப்பத்தைப் பொறுத்துக்கொள்ள முடியவில்லே. அவர் மாட்டின் மீதிருந்து கீழே விழுந்துவிட்டார். அங்கு நிழல் இல்லே. அதனல், மாட்டின் நிழலிலே அவரைக் கிடத்தி, விசிறினுர்கள். சிறிது களேப்பு நீங்கிய பின் அவரை மாட்டின்மேலேற்றி, மெல்ல

மெல்ல நடத்திக்கொண்டு போய் ஊரை அடைந்தார்கள்.

4. அவர்கள் மாட்டுக்காரனுக்கு மூன்று பணம் கூலி கொடுத்தார்கள். அவன், “இது போதாது,” என்றான். அவர்கள், “இதென்ன! உன்னுடன் பேசிய கூலி மூன்று பணந்தானே?” என்றார்கள். அவன் மறுத்து, “மாடு வாகனமாய் ஏறிச்செல்வதற்கு இந்தக் கூலி சரிதான்; ஆனால், நடுவழியில் வெயிலுக்குக் குடையாய் உதவினதற்குக் கூலி வேண்டாவா?” என்று கூச்சலிட்டான். அவர்கள், “அநியாயம்! அநியாயம்!” என்றார்கள்.

5. ஊரார் அவர்கள் இடும் கூச்சலைக் கேட்டு அங்கு வந்தனர். அறிஞன் ஒருவன் இருவர் வழக்கையும் கேட்டறிந்தான். மாட்டுக்காரன் அவ்வறிவிலிகளை ஏமாற்ற நினைக்கிறான் என்பதை அவன் அறிந்துகொண்டான். ஆதலால், அவனுக்குப் புத்தி கற்பிக்கத் தீர்மானித்தான்.

6. அவன் மாட்டுக்காரனை அருகில் அழைத்து, “ஐயா, மாடேறி வந்ததற்குக் கூலி பணமும், மாட்டின் நிழலில் இருந்ததற்குக் கூலி பணத்தின் நிழலுமாகும். ஆயினும், இப்போது சூரியன் மறைந்துவிட்டதால் பணத்தின் நிழலுக்கு வழியில்லை. அதற்குப் பதிலாகப் பணத்தின் ஒலியை நன்றாகக் கேட்டுக்கொள்ளும்,” என்று சொல்லி, அவனை இறுகப்பிடித்துப் பணப்பையைத் தூக்கி, அவன் காதிலே நன்றாகத் தேய்த்தான். மாட்டுக்காரன், “ஐயா, காது நோகிறது! கூலி போதும்! என்னை விட்டுவிடுங்கள்!” என்றான். குரு அறிஞனைப் புகழ்ந்தார்.

## சொற்கள் :

| | | |
|---|---|---|
| வயதான | களைப்பு | வழக்கு |
| ஐவர் | வாகனமாய் | தேய்த்தான் |
| விசிறினர்கள் | அறிஞன் | பரமார்த்தம் |
| மறுத்து | தூக்கி | வெப்பம் |
| கூச்சலிட்டான் | உலக அறிவு | போதாது |
| இறுக | நெடுந்தொலை | குடை |
| குரு | மெள்ள | அறிவிலி |
| கடுவேனில் | நடுவழி | நோகிறது |

## கேள்விகள் :

1. குருவின் மாணவர் மாட்டை வாடகைக்கு அமர்த்தக் காரணம் என்ன ?

2. வழியில் குருவுக்கு நேர்ந்தது என்ன ?

3. மாட்டுக்காரன் அதிகமான கூலி கேட்கக் காரணம் என்ன ?

4. அவனுக்கு யார் எவ்வாறு புத்தி புகட்டினர் ?

## கட்டுரைப்பயிற்சி :

உன்னை அறிஞனாக நினைத்துக்கொண்டு, இக்கதையை, ' நான் ' என ஆரம்பித்து எழுது.



## 26. காகமும் நாகமும்

கோடுறு சினையிற் காகம்
கூடுவைத் தனேக காலம்
பேடொடு கூடி வாழும்
பெருமரப் பொந்தில் வந்தே
ஆடிய கரும்பாம் பொன்றங்கு
அதுபெறும் முட்டை யெல்லாம்
நாடியே குடித்துப் போட
நலிந்துளம் மெலிந்து வாடி 1

தன்னுயிர்ப் பாங்க னான
சம்புகன் அருகு போய், ‘ இங்கு
என்னசெய் குவன்நான் !’ என்ன,
‘ இதைக்கொலல் அரிதோ ? நீபோய்
மன்னவன் தேவி யர்டும்
மஞ்சனச் சாலை புக்குப்
பொன்னணி கொண்டு வந்து
போடுக பொந்தில்,’ என்ன 2

காகம்அப் படியே செய்யக்
காவலன் ஏவ லாளர்
ஏகிமா மரத்தின் பொந்தை
ஈர்ந்தனர்; ஈரும் போதில்
நாகமங் கிருந்து சீற
நறுக்கினர் இருதுண் டாக;
ஆகையால், உபாயத் தாகா
அருஞ்செயல் எதுவும் இன்றே. 3

—வீரமார்த்தாண்ட தேவர்

சொற்கள்:

| | | | |
|---|---|---|---|
| கேடு | உறு | சினை | கூடு |
| பேடு | பெருமரம் | கரும்பாம்பு | முட்டை |
| குடித்து | மெலிந்து | பாங்கன் | கொலல் |
| அரிது | தேவி | மஞ்சனச்சாலை | பொன்னணி |
| பொந்து | ஏவலாளர் | ஈர்ந்தனர் | சீற |
| நறுக்கினர் | துண்டு | உபாயம் | அருஞ்செயல் |

கேள்விகள்:

1. காகத்துக்கு ஏற்பட்ட துன்பம் யாது?
2. அத்துன்பத்தைப் போக்க நரி கூறிய சூழ்ச்சி என்ன?
3. அரசன் ஏவலாளர் என்ன செய்தனர்?

பயிற்சி:

இக்கதையை நாடகமாக எழுது.

# 27. ஔவையார் (நாடகம்)

## காட்சி–1

| | |
|---|---|
| இடம் : | சாலை |
| நடிகர் : | ஔவையார், குடியானவன். |

[குடியானவன் சுப்பன் வயலிலிருந்து வந்துகொண்டிருக்கிறான்; ஔவையார் தள்ளாடித் தள்ளாடி நடந்து வருகிறார்.]

**சுப்பன் :** பாட்டி, நீ மிகவும் களைத்திருக்கிறாயே! ஐயோ! பாவம்! தள்ளாத வயது!

**ஔவை :** அப்பா, களைப்புத்தான்; பசியும் மிகுதியாகின்றது! தளர்ச்சி மேலிடுகின்றது!

**சுப்பன் :** பாட்டி, தள்ளாத வயதில் இவ்வாறு தனி வழி வரலாமா? எந்த ஊருக்குச் செல்லுகின்றாய்?

**ஔவை :** அப்பா, எனக்கு யாதும் ஊரே; யாவரும் கேளிரே. தமிழ் மூதாட்டி யான். ஆதலால், தமிழகமே என் வீடு.

**சுப்பன் :** (வியப்புற்று) பாட்டி, என் வீட்டுக்கு வா. நாங்கள் குடிக்கும் கஞ்சியைக் குடித்துக் களைப்புத் தீர்ந்து போகலாம்.

**ஔவை :** அப்பா, நீ நல்லவனாகக் காணப்படுகிறாயே! உன் விருப்பப்படியே உன்னுடன் வருகிறேன்.

(இருவரும் செல்கின்றனர்)

**சுப்பன் :** (தனக்குள்ளே) தமிழ்ப் பாட்டி வருகிறாள். மனைவி என்ன சொல்லுவாளோ,

தெரியவில்லையே! அவள் அடங்காப் பெண்ணல்லவா! என்ன செய்வேன்! இனிதாகப் பேசி, மனத்தைத் திருத்தி, சிறிது அன்னமிடச் செய்கிறேன்.

## காட்சி–2



| | |
|---|---|
| இடம் : | குடியானவர் வீடு. |
| நடிகர் : | ஔவையார், குடியானவன், அவன் மனைவி மாரி. |

[ஔவையார் களைப்புடன் வீட்டின் வெளித் திண்ணையில் உட்காருகிறார் ; சுப்பன் வீட்டினுள்ளே செல்கிறான்.]

**மாரி :** இன்றைக்கு விரைவில் வந்துவிட்டாயே! என்ன செய்தி?

**சுப்பன் :** மாரி, வயலுக்குத் தண்ணீர் பாய்ந்துவிட்டது. அதனாலேதான் விரைவில் வந்துவிட்டேன்.

**மாரி :** சாப்பிடவேண்டுவதுதானே?

**சுப்பன் :** சாப்பிட வேண்டுவதுதான்! ஆனால், நேரமானல் பரவாயில்லை. உன் தலை மயிர் குலைந்திருக்கிறதே! அதை வாரி முடித்துக் கட்டு-கிறேன். பின்பு சாப்பிடலாம்.

**மாரி :** அப்படியே செய். (உட்காருகிருள். சுப்பன் அவள் அருகில் உட்கார்ந்து, இனிமையாக பேசிக்கொண்டே ஈர் உருவுகின்ருன்.)

**சுப்பன் :** கண்ணே, நீ தமிழ் மூதாட்டியைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிருயா ?

**மாரி :** மூதாட்டியோ, மூதேவியோ! அவளைப் பற்றி நமக்கென்ன கவலை ?

**சுப்பன் :** அவள் தமிழில் சிறந்த அறிவு பெற்றவள் ; பாட்டுக்கள் பாடுவாள் ; எல்லாரும் அவளைக் கொண்டாடுகிருர்கள். அதனுலேதான் கேட்டேன்.

**மாரி :** எல்லாரும் கொண்டாடினுல், நானும் கொண்டாட வேண்டுமோ ?

**சுப்பன் :** இல்லை ; அவளை உபசரித்தால், செல்வம் பெருகும் என்பார்கள்.

**மாரி :** அவளை உபசரிக்கவும் வேண்டா ; நமக்குச் செல்வம் பெருகவும் வேண்டா.

**சுப்பன் :** செல்வம் பெருகும் என்பதற்காகச் சொல்லவில்லை. நம் வீட்டுக்கு ஔவை வந்தால் உபசரிக்கலாமா எனக் கேட்டேன்.

**மாரி :** ஒகோ! இதைச் சொல்லத்தான் இவ்-வளவு பணிவிடையா! (கோபத்துடன்) உனக்கு அழுவது போதாதென்று ஊருக்கும் அழச்சொல்லு-கின்ருயா ? ஊர் சுற்றும் கிழத்தை இங்கே இழுத்து வந்து உபசரிக்கச் சொல்லுகின்ருயா ? முதலில் உன்னை உபசரிக்கின்றேன்.

[மாரி வேகமாய்ச் சென்று, கழுநீர் பானையை எடுத்து வந்து, அவன் தலையின்மீது ஊற்றி, முறத்தால் அடிக்கிருள். குடியானவன் வெளியே ஓடுகிருன். அவன் பின்னே ஓடுகின்ருள். இதனைக் கண்ட ஔவையார் வியப்புற்றுப் பாடுகிருர்.]

இருந்தங் கிதம்பேசி ஈரொடுபேன் வாங்கி
விருந்துவந்த தென்று விளம்ப—வருந்திமிக
ஆடினுள் பாடினுள் ஆடிப் பழமுறத்தால்
சாடினுள் ஓடோடத் தான்.

[அருகிலிருந்து முகத்தைத் துடைத்து, ஈருடன் பேனையும் உருவியெடுத்து, விருந்து வந்ததென்று கணவன் சொல்ல, மனைவி மிகவும் வருந்தி, ஆடிப்பாடிப் பழமுறத்தைக் கொண்டு அவன் ஓடஓட அடித்தாள்.]

**சுப்பன் :** (ஔவையார் காலில் விழுந்து) தாயே, பொறுத்துக்கொள்! இவள் அடங்காப் பெண்ணுயிருக்கிருள். என்ன செய்வேன்!

(ஔவையார் பாடுகிருர்.)

பர்த்தாவுக் கேற்ற பதிவிரதை உண்டானுல்
எத்தாலும் கூடி யிருக்கலாம்;—சற்றேனும்
ஏறுமா ருக இருப்பாளே யாமாயின்
கூருமற் சந்நியாசங் கொள்.

[கணவனுக்குத் தக்க கற்புடைய மனைவியாயிருந்தால், எவ்வழியாலும் சேர்ந்து வாழலாம்; சிறிதாயினும் ஏறுமாருக இருப்பின், ஒருவரோடும் கூருமல் துறவறத்தை மேற்கொள்.]

**சுப்பன் :** அம்மா, நான் அறிவு பெற்றேன்! இதோ, துறவு மேற்கொள்ளுகிறேன்!

(ஔவையார் அவ்வீட்டினின்றும் செல்கிருர்.)

### சொற்கள் :

| | | |
|---|---|---|
| ஒளவையார் | அடங்கா | உபசரி |
| தமிழகம் | சீக்கிரமாக | கழுநீர் |
| விருப்பம் | பெருகும் | விருந்து |
| அன்னம் | இழுத்து | பொறுத்து |
| வாரி முடித்து | முறம் | சந்நியாசம் |
| கொண்டாடு | துடைத்து | மூதாட்டி |
| கிழத்தை | ஏறுமாறு | திருத்தி |
| ஊற்று | களைப்பு | குலைந்து |
| சாடினுள் | கேளிர் | மூதேவி |
| பதிவிரதை | கஞ்சி | பணிவிடை |
| தள்ளாடி | இதமாக | பானை |
| தனி வழி | பாய்ந்து | விளம்பு |
| சற்று | ஈருருவி | பர்த்தா |

### கேள்விகள் :

1. குடியானவன் ஒளவையாரை எங்கே அழைத்துச் சென்றான் ?

2. அவன் மனைவிக்குச் செய்த உபசாரம் என்ன ?

3. அவள் அவனுக்கு எவ்வாறு உபசாரம் செய்தாள் ?

4. ஒளவையார் குடியானவனுக்குக் கூறிய புத்தி யாது ?

### பயிற்சி :

1. பாய், குலை, அன்னம்—இவற்றை அமைத்து வெவ்வேறு பொருள் உள்ள வாக்கியங்கள் எழுது.

2. மூவர் சேர்ந்து இதனை நாடகமாக நடிக்கலாம்.

# 28. நல்ல வேலையாள்

'மாடுகன்று மேய்த்திடுவேன்; மக்களை நான் காத்திடுவேன்;
வீடு பெருக்கி விளக்கேற்றி வைத்திடுவேன்;
சின்னக் குழந்தைக்குச் சிங்காரப் பாட்டிசைத்தே
ஆட்டங்கள் காட்டி அழாதபடி பார்த்திடுவேன்;
காட்டுவழி யானாலும், கள்ளர்பயமானாலும்,
இரவிலே பகலிலே எந்நேர மானாலும்,
சிரமத்தைப் பார்ப்பதில்லை; தேவரீர் தம்முடனே
சுற்றுவேன்; தங்களுக்கோர் துன்பமுறா மற்காப்பேன்;
கற்றவித்தை ஏதுமில்லை; காட்டு மனிதன்ஐயே!
ஆன பொழுதுங்கோல் அடிகுத்துப் போர்மற்போர்
நானறிவேன்; சற்றும் நயவஞ் சனைபுரியேன்,'
என்றுபல சொல்லி நின்றான்.
பண்டைக்கா லத்துப் பயித்தியத்தில் ஒன்றெனவே
கண்டு, மிகவும் களிப்புடனே நானவனை
ஆளாகக் கொண்டுவிட்டேன்; அன்று முதற்கொண்டு
நாளாக நாளாக, நம்மிடத்தே கண்ணனுக்குப்
பற்று மிகுந்துவரல் பார்க்கின்றேன்; கண்ணனால்
பெற்றுவரும் நன்மையெலாம் பேசி முடியாது;
கண்ணை இமையிரண்டும் காப்பதுபோல், என்குடும்பம்
வண்ணமுறக் காக்கின்றான்; வாய்முணுத்தல் கண்டறியேன்;
வீதி பெருக்குகின்றான்; வீடுசுத்த மாக்குகின்றான்;
தாதியர்செய் குற்றமெலாம் தட்டி அடக்குகிறான்;
மக்களுக்கு வாத்தி, வளர்ப்புத்தாய், வைத்தியனாய்,
ஒக்கநயம் காட்டுகிறான்; ஒன்றும் குறைவின்றிப்
பண்டமெலாஞ் சேர்த்துவைத்துப் பால்வாங்கி மோர்வாங்கிப்
பெண்டுகளைத் தாய்போற் பிரியமுற ஆதரித்து
நண்பனாய், மந்திரியாய், நல்லா சிரியனுமாய்,
பண்பிலே தெய்வமாய்ப் பார்வையிலே சேவகனாய்
எங்கிருந்தோ வந்தான்.

## சொற்கள்

| | | |
|---|---|---|
| மாடுகன்று | குத்துப்போர் | வளர்ப்புத்தாய் |
| சின்ன | களிப்பு | பிரியமுற |
| காட்டு வழி | நன்மை | பண்பு |
| உருமல் | முணுத்தல் | குறைவு |
| கோல் அடி | வாத்தி | விளக்கு |
| பயித்தியம் | பெண்டு | காட்டி |
| பற்று | ஆசிரியன் | சிரமம் |
| வண்ணமுற | சேவகன் | காட்டு மனிதன் |
| அடக்கு | பெருக்கி | நயவஞ்சனை |
| நயம் | ஆட்டங்கள் | நாளாக |
| மந்திரி | பயம் | குடும்பம் |
| தெய்வம் | வித்தை | தாதியர் |
| மேய்த்திடு | மற்போர் | வைத்தியன் |
| சிங்காரம் | நாளாக | ஆதரித்து |
| கள்ளர் | இமை | பார்வை |
| காப்பேன் | தட்டி | வரல் |

## கேள்விகள் :

1. கண்ணன் என்ன என்ன வேலைகள் செய்வதாகக் கூறினன் ?
2. கண்ணனை ஆளாகக்கொள்ளக் காரணம் என்ன ?
3. அவன் வீட்டில் செய்த வேலைகள் யாவை ?
4. கண்ணன் எவர் எவராய் நயம் காட்டினன் ?
5. கண்ணன் எவர் எவராய் வந்தான் ?



## 29. செவிட்டுத் தம்பி

1. திருநெல்வேலியில் திருவம்பலபுரம் என்பது ஒரு சிற்றூர். அவ்வூரில் மதிவாணன், மாணிக்கம் என்ற உடன் பிறந்தார் இருவர் இருந்தனர். மதிவாணன் மதி நுட்பம் உடையவன். அவ்வூர் மக்கள் அவனை நன்கு மதித்தனர். மாணிக்கம் அறிவு இல்லாதவன். அவனுக்குக் காதும் மந்தம். அவன், வயலில் சென்று காலை முதல் மாலைவரை உழைத்து வந்தான். மதிவாணன் வீட்டிலிருந்து வீட்டுச் செயல்களைக் கவனித்து வந்தான்.

2. ஒரு நாள் மாணிக்கத்துக்கு மிகக் களைப்பாயிருந்தது. மதிவாணன் நோயுற்றிருந்த உறவினர் ஒருவரைப் பார்த்துவரப் புறப்பட்டான். மாணிக்கம், “அண்ணா, இன்று எனக்கு மிகக் களைப்பாயிருக்கிறது. நீ வயலுக்குச் செல். நான்

உறவினரைப் பார்த்து வருகிறேன்,'' என்ருன். மதிவாணன், ''உனக்குக் காது மந்தம் அன்ருே? அவர் கேட்பதற்கு நீ என்ன பதில் கூறுவாய்?'' என்ருன். மாணிக்கம், ''அண்ணு, அவரிடம் கேட்க வேண்டிய கேள்விகளை என்னிடம் கூறிவிடு. நான் அப்படியே கூறிவிடுவேன்,'' என்ருன்.

3. மதிவாணன், ''நீ அவரைப் பார்த்ததும் 'ஐயா, உடம்பு எப்படி இருக்கிறது?' என்று கேள். அவர், 'சிறிது நலந்தான்,' என்று சொல்வார். நீ, 'மிகவும் மகிழ்ச்சி' என்று சொல்லி, 'என்ன சாப்பிடுகிறீர்கள்?' என்று கேள். அவர் ஏதாவது உணவுப் பொருளைச் சொல்வார். நீ, 'அது நல்ல உணவு; அதையே சாப்பிட்டு வாருங்கள்,' என்று சொல்லியபின், 'யாரிடம் மருந்து சாப்பிடுகிறீர்கள்?' என்று கேள். அவர் ஒரு மருத்துவரின் பெயரைச் சொல்வார். உடனே, 'அவரிடமே சாப்பிடுங்கள். விரைவில் நலமாகும்,' என்று சொல்,'' எனக் கூறினன்.

4. மாணிக்கம் உறவினர் வீட்டை அடைந்தான். உறவினர் படுக்கையில் படுத்திருந்தார். மாணிக்கம் அவர் அருகில் சென்று, ''ஐயா, உடம்பு எப்படியிருக்கிறது?'' என்ருன். அவர், ''வீடு போபோ என்கிறது! காடு வாவா என்கிறது!'' எனக் கூறினுர். மாணிக்கம் அவர் சொன்னதை அறிந்துகொள்ளாமல், அண்ணன் கற்பித்திருந்தபடி, ''மிகவும் மகிழ்ச்சி!'' என்ருன். அவருக்கு மிகுந்த சினம் உண்டாயிற்று. மாணிக்கம் அதைக் கவனிக்காமல், ''ஐயா, என்ன சாப்பிடுகிறீர்கள்?'' எனக் கேட்டான். அவர், ''மண்ணைத்தான் சாப்பிடுகிறேன்!'' என்று எரிச்சலுடன்

கூறினர். மாணிக்கத்திற்கு அவர் சொல்லியது கேட்கவில்லை. அவன், "அது நல்ல உணவுதான்; அதையே சாப்பிட்டு வாருங்கள்," என்று சொன்னான்; கடைசியாக, "நீங்கள் யாரிடம் மருந்து சாப்பிடுகிறீர்கள்?" எனக் கேட்டான். அவருக்கு இருந்த எரிச்சலில் "எமன்தான் மருத்துவன்," என்ருர். அவன் அதை அறியாமல், "அவரிடமே மருந்து சாப்பிடுங்கள்; விரைவில் நலமாகும்," என்ருன். இதைக் கேட்ட நோயாளருக்கு அடக்க முடியாத கோபம் எழுந்தது. அவர் படுக்கையை விட்டு எழுந்து, மாணிக்கத்தைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளிவிட்டார். மாணிக்கம் காரணம் தெரியாமல் விழித்தான். அப்போது வயலிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்த மதிவாணன், செய்தியறிந்து, உறவினரிடம் சென்று, உண்மையைக் கூறி, மாணிக்கம் செவிடன் என்பதைத் தெரிவித்தான். கேட்டவர்கள் சிரித்தார்கள். உறவினரும் விழுந்து விழுந்து சிரித்தனர். மாணிக்கம் அன்றுமுதல் அப்படிப்பட்ட வேலைகளை அண்ணனிடமே விட்டுவிட்டான்.

சொற்கள்:

| | | |
|---|---|---|
| சிற்றூர் | விழித்தான் | உணவு |
| மந்தம் | மதிவாணன் | மண்ணைத்தான் |
| நோயுற்று | மதித்தனர் | நோயாளர் |
| மருத்துவர் | வைத்தியர் | மதி நுட்பம் |
| கற்பி | மாணிக்கம் | உறவினர் |
| எரிச்சல் | உழைத்து | எமன் |

கேள்விகள் :

1. மதிவாணனை மக்கள் மதிக்கக் காரணம் என்ன?

2. மாணிக்கம் எப்படிப்பட்டவன்?

3. ஒரு நாள் மாணிக்கம் கூறியதென்ன?

4. மதிவாணன் மாணிக்கத்துக்குக் கற்பித்தது என்ன?

5. மதிவாணன் ஏன் வெளியில் தள்ளப்பட்டான்?

பயிற்சி :

1. 'வீடு போபோ என்கிறது; காடு வாவா என்கிறது.'—இதன் பொருளை விளக்குக.

2. நிறுத்தக் குறிகள் இடு :—ஐயா உடம்பு எப்படி இருக்கிறது அது நல்ல உணவுதான் அதையே சாப்பிட்டு வாருங்கள்

3. விழுந்து விழுந்து, வாவா—இப்படிச் சொற்கள் அடுக்கி வருவது அடுக்குத் தொடர் எனப்படும்.



## 30. தந்தையை மதியாத மைந்தன்

1. பெருங்குளம் என்ற ஊரில் ஈனன் என்பவன் பெருஞ்செல்வன். அவனுக்கு அழகிய மனைவியும், புதல்வன் ஒருவனும் இருந்தனர். அவன் கிழத் தந்தையும் அவன் வீட்டில் இருந்தான். ஈனன் பணக்காரன்; ஆதலால், நாள்தோறும் இனிய உணவுகளை உண்டு வந்தான்; வெள்ளிக் கிண்ணத்தில் தன் மகனுக்கு உணவு ஊட்டினன். அவன் மனைவியும் விலையுயர்ந்த நகைகளை அணிந்திருந்தாள். ஆனல், ஈனன் அவனுடைய முதிய தந்தைக்கு உடைந்த பானையோட்டில் கஞ்சி வார்த்து வந்தான். அவரை ஓயாமல் திட்டுவதும் அடிப்பதும் அவனது வழக்கம்.

2. ஈனன் மைந்தன் சிறுவனுயிருந்தாலும், புத்திசாலி. தன் தந்தை பாட்டனைக் கொடுமையாய் நடத்துவதைக் கண்டு அவன் மனம் புழுங்கினன். அவன் தன் பாட்டனிடம் சென்று, அவ-

னுக்கு அடிக்கடி ஆறுதல் சொல்லுவான். அவன் தன் தந்தைக்குப் புத்தி கற்பிக்க எண்ணினுன்.

3. ஒரு நாள் அவன் பாட்டன் வைத்திருந்த ஓட்டை எடுத்து ஒளித்து வைத்துவிட்டான். கிழவன் ஓட்டைத் தேடி, அதை வைத்த இடத்திலே காணுமல் வருந்தினுன். ஈனன் வந்து, "கிழவா, உனக்கு யாரால் நாள்தோறும் ஓடு வாங்கித் தரமுடியும்?" என்று கோபித்துக் கூறிக் கிழவனே அடித்தான். கிழவன் ஓலமிட்டான்.

2. உடனே சிறுவன் ஓடி வந்து, "அப்பா, தாத்தாவை அடியாதே. அவ்வோட்டை நானே எடுத்து வைத்திருக்கிறேன்," என்ருன். தந்தை மகனேப் பார்த்து, "அதை நீயேன் எடுத்தாய்?" என்று கேட்டான். அச்சிறுவன், "அப்பா, இன்னும் சில நாளில் நீயும் கிழவனுகிவிடுவாய்; அப்போது வீணுகக் காசு செலவழித்துப் புது ஓடு உனக்கு வாங்க வேண்டுமே என்று எண்ணி, அதைப் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறேன்," என்ருன். அதைக் கேட்ட தந்தை மிகவும் சினந்து, "அடே, உன் தந்தையாகிய எனக்கு ஓடா கொடுக்கப் போகிருய்?" என்ருன். சிறுவன் அஞ்சாமல், "அப்பா, நீ உன் தந்தையை எப்படி நடத்துகிருயோ, அப்படியே நானும் உன்னே நடத்த வேண்டாவா?" என்ருன். இதைக் கேட்ட ஈனன், திருந்தினுன்; தன் தந்தையை வணங்கி, அது வரை தான் செய்த குற்றத்தை மன்னிக்கும்படி வேண்டினுன்.

### சொற்கள் :

| | | |
|---|---|---|
| முதிய | திட்டுவது | அடிக்கடி |
| ஓயாமல் | மனம் புழுங்கு | நடத்த |
| கொடுமை | பத்திரமாக | அழகிய |
| காணுது | அஞ்சாது | விலையுயர்ந்த |
| வீணுக | பெருஞ்செல்வன் | வார்த்து |
| மதியாத | வெள்ளி | கையான |
| நாள்தோறும் | கஞ்சி | ஓலமிடு |
| பானையோடு | புத்திசாலி | மன்னிக்கும்படி |

### கேள்விகள் :

1. ஈனன் தன் தந்தையை எவ்வாறு நடத்தினுன்?

2. அவனைத் திருத்த அவன் மகன் செய்தது என்ன?

3. சிறுவன் தன் தந்தைக்குப் புத்தி புகட்டக் கூறியது என்ன?

4. இந்தக் கதையின் படிப்பினை யாது?

### பயிற்சி :

1. இப்பாடத்தினின்று வினையெச்சம், பெயரெச்சம், வினைமுற்றுக்களுக்கு உதாரணங்கள் எடுத்து எழுது.

2. எதிர்ச்சொல் எழுது :—அஞ்சாமல், காணுமல், உடைந்த.

3. 'அடி' என்பதற்கு எதிர்மறை 'அடியாதே'. கீழ் வருவனவற்றிற்கு எதிர்மறைச் சொற்கள் எழுது :

உண், நடத்து, சொல், கற்பி.

4. இக்கதையை மூவர் நாடகமாக நடிக்கலாம்.



## 31. மான் அரசு

1. ஒரு மான் ஆயிரம் மான்களுக்கு அரசாய் இருந்து வந்தது. அது அழகும் வீரமும் பொருந்தியது; தன் இனத்தைக் கண்ணின் மணி போலக் காத்து வந்தது; ஒரு சிறிய மான் குட்டியைக்கூடப் பகைவர் துன்புறுத்தாமல் பாதுகாத்து வந்தது. இதனால், மான்கள் எல்லாம் அதன்மீது மிகவும் அன்பு கொண்டிருந்தன.

2. ஒரு நாள் வேடன் ஒருவன் மான்களைக் கண்டான். அவன் தன் அரசனிடம் சென்று, "அரசே, நமது மலைச்சாரலில் அழகிய மான் ஒன்று ஆயிரம் மான்களுடன் வாழ்ந்து வருகின்றது. அதைப்போன்ற அழகிய மானை நான் கண்டதே இல்லை!" என்றான். அரசன், உடனே சென்று மான் அரசை உயிருடன் பிடித்துவரத் தன் வீரர்களுக்குக் கட்டளையிட்டான். வீரர்கள்

சென்று மான் அரசு வாழ்ந்த காட்டை வளைத்-துக்கொண்டார்கள். அக்காட்டின் தெற்கில் கான்யாறு ஒன்று ஓடியது. அதில் நீர் மிக வேகமாய் ஓடிக்கொண்டிருந்தது. அதைக் கடந்து மறுகரை-யிலுள்ள அடர்ந்த காட்டையடைந்தாலன்றி, மான்கள் தப்பிச் செல்ல வழியில்லை.

3. மான் அரசு தன் கூட்டத்தை எப்படியும் காப்பாற்ற வேண்டும் என்ற நோக்கத்துடன், ஆற்-றின் நடுவில் குதித்து நின்றது. அதன் மூக்கும் முதுகும் மட்டுமே நீர்மட்டத்துக்குமேல் தெரிந்-தன. உடனே, மற்ற மான்கள் ஒன்றன் பின் ஒன்-றாக அதன் முதுகில் தனது முன்னங்கால்களை ஊன்றித், தாவிக் குதித்து அக்கரை சேர்ந்தன. மான் அரசின் முதுகின் தோல் கிழிந்து இரத்தம் பெருகியது. ஆனால், மான் அரசு, அசையவில்லை. இறுதியாக, அதன் முதுகெலும்பு முறிந்து-விட்டது. ஒரே ஒரு மான் குட்டி மறு கரை சேர முடியாமல் தத்தளித்தது. மான் அரசு அக்குட்டி-யைத் தன் முதுகில் ஏற்றிச் சென்று அக்கரை சேர்த்தது; பின்பு கீழே விழுந்து உயிர் துறந்தது. அதைக் கண்ட மான்கள் கதறி அழுதன.

4. இதைத் தூரத்திலிருந்து கவனித்துக்-கொண்டிருந்த வீரர்கள் தம் அரசனுக்குத் தெரி-வித்தார்கள். அவன் அங்குச் சென்று மான் அரசின் உடலை எடுத்து அடக்கஞ்செய்து, அவ்-விடத்தில் அழகிய கோவில் ஒன்றைக் கட்டினான்.

**சொற்கள் :**

| | | |
|---|---|---|
| மான் அரசு | குடிகள் | நீர் மட்டம் |
| துன்புறுத்தாமல் | அடர்ந்த | மேல் தோல் |
| வளைத்து | கிழிந்து | கட்டினான் |
| மறு கரை | கதறி | கண்ணின் மணி |
| முன்னங்கால் | வீரம் | கடந்து |
| தத்தளித்தது | சாரல் | நடுவில் |
| துறந்தது | கான் யாறு | இரத்தம் |
| அடக்கஞ்செய்து | தப்பிச்செல்ல | சேர்ந்தது |

**கேள்விகள் :**

1. மான் அரசின்மீது மான்கள் அன்பு கொள்ளக் காரணம் என்ன ?

2. வேடன் தன் அரசனிடம் கூறியது என்ன ?

3. மான்களுக்கு வரவிருந்த ஆபத்து என்ன ?

4. மான்களைத் தப்புவிக்க மான் அரசு என்ன செய்தது ?

5. மான் அரசுக்கு மன்னன் கோயில் கட்டக் காரணம் என்ன ?

**பயிற்சி :**

1. பிரித்தெழுது :—
காட்டையடைந்தாலன்றி, அடக்கஞ்செய்து.

2. சேர்த்தெழுது :—தெற்கு + திசை = தென்திசை
வடக்கு + திசை
மேற்கு + திசை
கிழக்கு + திசை.

3. மூன்றும் பத்தியிலுள்ள எதிர்மறை வினைச்சொல்லைக் குறிப்பிடு.



# 32. நரை முடித்த அரசன்

## காட்சி-1

**இடம் :** அரசன் அவைக்களம்

**நடிகர் :** கரிகாற்சோழன், அமைச்சன், முதியவர் இருவர், காவலன்.

[முதியவர் இருவர் தூரத்தில் வருகின்றனர். அவ்விருவரும் அவைக்களத்தையடைந்து, அரசனைப் பார்க்கின்றனர் ; பின்பு திரும்பிச் செல்கின்றனர்.]

**கரிகாலன் :** அமைச்சரே, முதியவர் இருவர் இங்கு வந்தனர் ; ஒன்றும் கூருது திரும்பிச் செல்கின்றனரே ! காரணம் என்ன ?

**அமைச்சன் :** அரசரே, யானும் காரணம் அறியேன். அவர்களை அழைத்துக் கேட்போம். (காவலனை நோக்கி) காவல, விரைந்து சென்று அம்முதியவர் இருவரையும் அழைத்து வா.

(காவலன் சென்று அழைத்து வருகிருன்.)

**கரிகாலன் :** பெரியீர், அவைக்களத்தை, அடைந்த நீவிர் திரும்பிச் செல்லக் காரணம் யாதோ?

**முதியவர் :** அரசரே, வணக்கம்! அரச சபையில் அனுபவம் மிக்க—அறிவு நிரம்பிய—நரைத் தலையையுடைய அரசரைக் காண எண்ணி வந்தோம். நீவிர் இளைஞராயிருத்தலின், மீண்டு சென்றோம்.

**கரிகாலன் :** நீங்கள் முதியவனான அரசனைக் காண விரும்பிய காரணம் யாது?

**முதியவர் :** எமக்குள் ஒரு வழக்கு உண்டு; அதனை ஆராய்ந்து தீர்ப்புக் கூறுதற்குரிய முதிய அரசரை நாடி வந்தோம்.

**கரிகாலன் :** (சிறிது நேரம் சிந்தித்து) பெரியீர், நாளை வருக; உங்கள் விருப்பப்படி முதிய நீதிபதி ஒருவரை இங்கு வரவழைக்கிறேன்; அவரிடம் உங்கள் வழக்கைக் கூறுங்கள்.

**முதியவர் :** அரசரே, வணக்கம்! சென்று நாளை வருகின்றோம்.

(செல்கின்றனர்.)

## காட்சி-2

| | |
|---|---|
| இடம் : | அவைக்களம். |
| நடிகர் : | முதிய நீதிபதி, அமைச்சன், முதியவர் இருவர். |

**நீதிபதி :** பெரியீர், உமது வழக்கு யாது?

**முதியவர்-I :** ஐயா, சில திங்கள் முன்னர் யான் நூறு பொற்காசுகளை என் நண்பராகிய

இவரிடம் கொடுத்தேன். இவர் அவற்றைத் திருப்பிக் கொடுத்துவிட்டதாகக் கூறுகின்றார்.

நீதிபதி : (மற்றவரை நோக்கி) நீர் யாது கூறுகின்றீர் ?

முதியவர்–II : (மற்றவரிடம் தம் கைத்தடியைக் கொடுத்துவிட்டு) ஐயா, யான் வாங்கிய பொற்காசுகளை இவரிடம் கொடுத்துவிட்டேன். இது உறுதி.

(கைத்தடியைப் பெற்றுக் கொள்கின்றார்.)

நீதிபதி : முதியீர், அவர் கொடுத்துவிட்டதாகக் கூறுகின்றாரே !

முதியவர்–I : நீதிபதியவர்களே, உங்கள் அறிவுத்திறனால் ஆராய்ந்து, நீங்களே தீர்ப்புக் கூறுங்கள்.

நீதிபதி : (கைத்தடி வைத்திருந்த கிழவரிடமிருந்து கைத்தடியை வாங்கிக் கடன் கொடுத்த கிழவரிடம் கொடுத்து) பெரியீர், உமக்குச் சேரவேண்டிய பொற்காசுகள் சேர்ந்துவிட்டன.

முதியவர்–I : இக்கைத்தடி நூறு பொற்காசுகள் விலை பெறுமா ?

நீதிபதி : அக்கைத்தடி நூறு பொற்காசுகள் மதிப்புடையதாகும் என்பதே என் தீர்ப்பு. அதை என்னிடம் கொடும்.

(கைத்தடியை வாங்கி முறிக்கின்றார் ; பொற்காசுகள் கீழே விழுகின்றன. யாவரும் வியக்கின்றனர்.)

முதியவர் : ஆகா ! என்ன மதி நுட்பம் !

[நீதிபதி தம் மேலாடையைக் களைந்து, மீசை தாடிகளை நீக்கிவிடுகின்றார். இளைஞனை கரிகாலன் அவர்கள் முன் நிற்கின்றான்.]

### சொற்கள் :

| | | |
|---|---|---|
| நரை | மீண்டு | மீசை |
| அமைச்சன் | பொற்காசு | கூறுது |
| இளைஞன் | மேலாடை | அனுபவம் |
| திங்கள் | அவைக்களம் | தீர்ப்பு |
| முறிக்கின்ருர் | ஆராய்ந்து | திறன் |
| முதியவர் | உறுதி | தாடி |
| காவலன் | மதிப்பு | முதியீர் |

### கேள்விகள் :

1. முதியவர் அரசனைக் காண வந்த காரணம் என்ன ?
2. அவர்கள் ஏன் திரும்பிச் சென்ருர்கள் ?
3. முதியவர் வழக்கு யாது ?
4. கரிகாலன் வழக்கை எவ்வாறு தீர்த்தான் ?
5. கைத்தடியினுள் காசுகள் இருந்ததை கரிகாலன் எவ்வாறு அறிந்தான் ?

### பயிற்சி :

1. இரு பொருள் எழுது :—மதிப்பு, கரி, எண்ணி.
2. இக்கதை நிகழ்ச்சியை நேரில் பார்த்ததுபோல எழுது.
3. இக்கதையை நாடகமாக நடிக்கலாம்.

# செய்யுட்பகுதி

## I. நீதி

### 1. நல்வழி

நற்குடிப்பிறந்தாரின் தன்மை:

ஆற்றுப் பெருக்கற்று அடிசுடும்அந் நாளுமவ்வாறு
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும் ;—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்
இல்லையென மாட்டார் இசைந்து. 1

செத்தவர் பிழையார்:

ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ ? மாநிலத்தீர் !—வேண்டா ;
'நமக்கும் அதுவழியே ; நாம்போம் அளவும்
எமக்குஎன் ?' என்று இட்டுண்டு இரும். 2

உழவுத் தொழிலின் சிறப்பு:

ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழும் அன்றே ?—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை ; கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு. 3

செய்ய முடியாதவை:

ஆவாரை யாரே அழிப்பர் ? அதுவன்றிச்
சாவாரை யாரே தவிர்ப்பவர் ?—ஓவாமல்
ஐயம் புகுவாரை யாரே விலக்குவார்
மெய்யம் புவியதன் மேல் ? 4

**செல்வம் சேரப் பெருதவர் :**

செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால்
எய்த வருமோ இருநிதியம் ?—வையத்து
அறும்பாவம் என்னஅறிந்து அன்றிடார்க்கு இன்று
வெறும்பானை பொங்குமோ மேல் ? 5

**உலோபிகளின் அறியாமை :**

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்து,
கேடுகெட்ட மானிடரே ! கேளுங்கள் :—கூடுவிட்டிங்கு
ஆவிதான் போயினபின்பு ஆரே அனுபவிப்பார்
பாவிகாள் ! அந்தப் பணம் ? 6

**மனித இயல்பு :**

உண்பது நாழி ; உடுப்பது நான்குமுழம் ;
எண்பது கோடிநினைந்து எண்ணுவன ;—கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்தனையும் சஞ்சலமே தான். 7

**ஈவோரை எல்லாரும் விரும்புவர் :**

மரம்பழுத்தால் வௌவாலை ‘ வா ’என்று கூவி
இரந்தழைப்பார் யாவரும்அங்கு இல்லை ;—சுரந்தமுதம்
கற்று தரல்போல் கரவாது அளிப்பரேல்
உற்றுர் உலகத் தவர். 8

**செல்வம் நிலையாமை :**

ஆறிடும் மேடும் மடுவும்போல் ஆம்செல்வம்
மாறிடும் ஏறிடும் ; மாநிலத்தீர் ;—சோறிடும் ;
தண்ணீரும் வாரும் ; தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து. 9

**வறுமையின் கொடுமை:**

கல்லானே ஆனாலும் கைப்பொருள்ஒன்று உண்டாயின்
எல்லாரும் சென்றங்கு எதிர்கொள்வர்;—இல்லானை
இல்லாளும் வேண்டாள்; மற்று ஈன்றெடுத்த தாய்வேண்டாள்;
செல்லாது அவன்வாயிற் சொல். 10

**அருஞ்சொற்பொருள்:**

நல்வழி—நல்ல வழிகளைக் கற்பிக்கும் நூல். இதன் ஆசிரியர் ஔவையார்.

1. பெருக்கு - வெள்ளம், ஊட்டும் - உண்பிக்கும், ஏற்றவர் - இரப்பவர் (ஏல் - பகுதி), நல்கூர்ந்தார் - வறியவர், உலகூட்டும்=உலகு+ஊட்டும்.

மேன்மக்கள் வறுமை நேரினும், வறியவர்க்குக் கொடுப்பதில் தவற மாட்டார்.

2. ஆண்டாண்டு - ஆண்டு+ஆண்டு, மாண்டார் - இறந்தவர். இறந்தோர் பிழையார்; ஆதலின் நமக்கும் இறப்பு உண்டு என்பதை அறிந்து, பிறருக்குக் கொடுத்து வாழ வேண்டும்.

3. பழுது - குற்றம், இழிவு.

பெரும்பதவிகளும் நீங்கிப் போகும்; ஆனால், உழு தொழிலுக்கோ அழிவில்லை; ஆதலால் அதனையே செய்க.

4. ஐயம் - பிச்சை, அம் - அழகிய. ஆக்கமும், அழிவும், இரத்தலும் விலக்குதற்கு உரியன அல்ல.

5. எய்தல் - அடைதல், இரு நிதியம் - பெருஞ் செல்வம். செல்வக் காலத்து ஈதலைச் செய்யாதவர் வறியவ ராவாராயின் மீண்டும் செல்வம் பெற மாட்டார்.

6. கூடு - உடம்பு, ஆவி - உயிர், பாடு பட்டு - உழைத்து. வருந்திச் சம்பாதித்த பணத்தை அறவழியிற் செலவிடாதவர் மறுமைப் பயனை இழப்பர் ஆதலின், பேதையராவர்.

7. கண்புதைந்த - அகக்கண் குருடான, சாந்தனை -

சாகும்+தனை - இறக்கும் அளவும். வீணுகப் பல எண்ணங்களை எண்ணுபவர் துன்பம் அடைவர்.

8. கன்று+ஆ - கற்ரு, அமுதம் - பால். இல்லை என்னுமல் கொடுப்பவரையே மக்கள் விரும்புவார்கள்.

9. மடு - பள்ளம், ஏறிடும் - உயரும், உண்ணீர்மை - உள்+நீர்மை, வீறும் - சிறப்படையும். செல்வத்தின் நிலையாமை அறிந்து, உணவும் நீரும் உதவுபவர் உயர்வு பெறுவர்.

10. இல்லான் - வறியவன், இல்லாள் - மனைவி.

அறிவில்லாச் செல்வரையும் பிறர் மதிப்பர்; வறியவனை அவன் தாயும், மனைவியுங்கூட மதிக்க மாட்டார்.

## 2. நன்னெறி

### சினம் தவிர்த்தல்:

உள்ளம் கவர்ந்தெழுந்து ஓங்கு சினங்காத்துக்
கொள்ளும் குணமே குணமென்க ;—வெள்ளம்
தடுத்தல் அரிதோ, தடங்கரைதான் பேர்த்து
விடுத்தல் அரிதோ ? விளம்பு. 1

### பெரியோர் இயல்பு:

தங்குறைதீர்வு உள்ளார் தளர்ந்து பிறர்க்குஉறூஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர் ;—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதாது, உலகின்
நிறையிருளை நீக்கும்மேல் நின்று. 2

### தகுதியுடையவர்க்கே ஈதல்:

'தக்கார்க்கே ஈவர் ; தகார்க்களிப்பார் இல்,' என்று
மிக்கார்க்கு உதவார் விழுமியோர் ;—எக்காலும்
நெல்லுக்கு இறைப்பதே நீரன்றிக் காட்டுமுளி
புல்லுக்கு இறைப்பரோ போய் ? 3

### நல்லோர் நட்பும் தீயோர் நட்பும் :

நல்லார் செய்யுங்கேண்மை நாடோறும் நன்ருகும் ;
அல்லார் செய்யுங்கேண்மை ஆகாதே ;—நல்லாய்! கேள் :
காய்முற்றின் தின்தீம் கனியாம் ; இளந்தளிர்நாள்
போய்முற்றின் என்னுகிப் போம் ? 4

### வறுமையிற்செம்மை :

எந்தைநல் கூர்ந்தான் இரப்பார்க்கீந்து என்றவன்
மைந்தர்தம் ஈகை மறுப்பரோ ?—பைந்தொடீஇ !
நின்று பயனுதவி நில்லா அரம்பையின்கீழ்க்
கன்றும் உதவும் கனி. 5

### நல்லோர் அல்லோர் வரவு :

நல்லோர் வரவாய் நகைமுகங்கொண்டு இன்புறீஇ,
அல்லோர் வரலால் அழுங்குவார்—வல்லோர் ;
திருந்தும் தளிர்காட்டித் தென்றல்வரத் தேமா
வருந்தும் சுழல்கால் வர. 6

### உருவத்தால் இகழாமை :

உடலின் சிறுமைகண்டு ஒண்புலவர் கல்விக்
கடலின் பெருமை கடவார் ;—மடவரால் !
கண்ணளவாய் நின்றதோ காணும் கதிரொளிதான்
விண்ணளவா யிற்ருே ? விளம்பு. 7

### கீழோர் தன்மை :

உண்டு குணமிங்கு ஒருவர்க்கு எனினும்கீழ்
கொண்டு புகல்வதவர் குற்றமே ;—வண்டுமலர்ச்
சேக்கை விரும்பும் செழும்பொழில்வாய் வேம்பன்ருே
காக்கை விரும்பும் கனி ? 8

**கைம்மாறு கருதாத உதவி:**

கைம்மாறு உகவாமல் கற்றறிந்தோர்மெய் வருந்தித்
தம்மால் இயலுதவி தாஞ்செய்வர் ;—அம்மா!
முளைக்கும் எயிறு முதிர்சுவைநா விற்கு
விளைக்கும் வலியனதாம் மென்று. 9

**பழிக்கு அஞ்சாதவர் :**

அறிவுடையார் அன்றி அதுபெறுர் தம்பாற்
செறிபழியை அஞ்சார் சிறிதும் ;—பிறைநுதால்!
வண்ணஞ்செய் வாள்விழியே அன்றி மறைகுருட்டுக்
கண்அஞ்சு மோஇருளைக் கண்டு? 10

**அருஞ்சொற்பொருள் :**

நன்னெறி—நன்மை+நெறி—நன்மை புரியும் வழிகளைக் கூறும் நூல். இதன் ஆசிரியர் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள். இவர் தந்தையார் காஞ்சீபுரம் குமாரசாமி தேசிகர் ; சமயம் - வீரசைவம் ; காலம் - சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்.

1. கவர்ந்து - தன் வசமாக்கி, காத்துக்கொள்ளும் - அடக்கிக்கொள்ளும், தடுத்தல் - கரை கட்டித் தடுத்தல், தடங்கரை - விசாலமான கரை. கோபத்தை அடக்கிக் கொள்ளும் குணமே நற்குணமாகும்.

2. கறை - களங்கம், விழுமியோர் - பெரியோர், தம் குறை - தமது துன்பத்தை, உறாஉம் - நேரிடுகின்ற, வெங்குறை - வெம்மை+குறை, தளர்ந்து - மனம் வாடி, தீர்க்கிற்பார் - தீர்க்க வல்லவராவர்.

பெரியோர் தமது துன்பத்தைப் பாராமல், பிறர் துன்பத்தை நீக்குவார்.

3. தக்கார் - தகுதியுடையோர், தகார் - தகுதியில்லாதவர், மிக்கார் - வரம்பு கடந்த நடத்தையுடையவர், முளி

புல் - உலர்ந்த புல், அறிவுடையோர் தகுதியுடையார்க்குக் கொடுப்பர் ; மற்றவர்க்குக் கொடுக்க மாட்டார்.

4. நல்லாய் - நற்குணமுடைய பெண்ணே, தீம் இனிய, கேண்மை - நட்பு, முற்றின் - முதிர்ந்தால், அல்லரா - தீயர். நல்லோருடைய நட்பு நாள்தோறும், வளரும் ; தீயோர் நட்பு நாள்தோறும் குறைந்து இல்லாது போகும்.

5. எந்தை - எம்+தந்தை, நல்கூர்ந்தான் - வறுமைப்பட்டான், பைந்தொடி பசுமை+தொடி - பசுமையான வளையல், நில்லா - நிலைத்து இராத, அரம்பை - வாழை. கொடுப்பதால் வறுமை வருமென அஞ்சி, அருளுடையார் ஈயாதிரார்.

6. தளிர் காட்டி - கொழுந்து விட்டு, திருத்தும் - அழகுபெறும், சுழல்கால் - சுழல்காற்று, வருந்தும் - இலைகள் உதிர வாடும், வல்லோர் - கல்வியில் வல்லவர், நகை முகம் - முகமலர்ச்சி, அழுங்குவார் - வருந்துவார்.

பெரியோர் நல்லவர்களுடைய வரவினால் மகிழ்ச்சியுற்று, தீயோர் வருகையால் துயருறுவார்.

7. மடவரால் - இளமை பொருந்திய பெண்ணே, கதிர் - சூரியன், சூரியன் ஒளி நம் கண் அளவினதன்று ; விண் அளவினது. ஆகவே, உருவிற்சிறியவரை அறிவிற் சிறியரென எண்ணாதே.

8. கீழ் - கீழ்மக்கள், கொண்டு புகல்வது - எடுத்துக் கூறுவது, சேக்கை - படுக்கை, பொழில்வாய் - சோலையில்.

கீழ்மக்கள் பிறருடைய குணத்தை மறைத்துக் குற்றங்களையே பேசித் திரிவார்கள்.

9. கைம்மாறு - பதிலுதவி, உகவாமல்-விரும்பாமல், எயிறு - பற்கள், வலியன - கடினமான பொருள்கள்.

பெரியோர் பதிலுதவியை எதிர் பாராது, பிறர்க்கு உதவுவர்.

10. அது - அக்கல்வி, செறி - மிகுந்த, வண்ணம் செய் - அழகு தருகின்ற, பிறைநுதால் - பிறைச்சந்திரன் போன்ற நெற்றியை உடைய பெண்ணே.

அறிவுடைய பெரியோர் பழிச்செயலுக்கு அஞ்சுவர்; அறிவில்லாத சிறியோர் பழிக்கு அஞ்சார்.

## 3. நீதி வெண்பா

### அனைவரும் இன்சொல்லையே விரும்புவர்:

மென்மதுர வாக்கால் விரும்பும் சகம்; கடின
வன்மொழியி னால்இகழும் மண்ணுலகம்;—நன்மொழியை
ஓதுகுயில் ஏதங்கு உதவியது? கர்த்தபந்தான்
ஏதபரா தம்செய்தது இன்று? 1

### நல்லவர் செயல்:

பகைசேரும் எண்ணான்கு பற்கொண்டே நன்னா
வகைசேர் சுவையருந்து மாபோல்—தொகைசேர்
பகைவரிடம் மெய்யன்பு பாவித்து அவரால்
சுகமுறுதல் நல்லோர் தொழில். 2

### பணிவுடைமையின் பெருமை:

வருத்தவளை வேய்அரசர் மாமுடியின் மேலாம்;
வருத்த வளையாத மூங்கில்—தரித்திரமாய்
வேழம்பர் கைபுகுந்து, மேதினியெல் லாந்திரிந்து,
தாழுமவர் தம்அடிக்கீழ்த் தான். 3

### ஆண்டானும் அடிமையும்:

ஆசைக்கு அடியான் அகிலலோ கத்தினுக்கும்
ஆசற்ற நல்லடியான் ஆவானே; ஆசை
தனையடிமை கொண்டவனே தப்பாது உலகம்
தனையடிமை கொண்டவனே தான். 4

### ஆராய்ந்து செய்க:

செய்யும் ஒருகருமம் தேர்ந்து புரிவதன்றிச்
செய்யின் மனத்தாபம் சேருமே—செய்யஒரு
நற்குடியைக் காத்த நகுலனை முன் கொன்றமறைப்
பொற்கொடியைச் சேர் துயரம் போல். 5

### தீயவர் தீமையே உருவானவர்:

ஈக்கு விடம்தலையில் எய்தும்; இருந் தேளுக்கு
வாய்த்த விடம்கொடுக்கில் வாழுமே;—நோக்கரிய
பைங்கண்அர வுக்குவிடம் பல்லளவே; துர்ச்சனருக்கு
அங்கமுழு தும்விடமே ஆம். 6

### தீயவர் திருந்தார்:

துர்ச்சனரும் பாம்பும் துலையொக் கினும், பாம்பு
துர்ச்சனரை ஒக்குமோ தோகையே!—துர்ச்சனர்தாம்
எந்தவிதத் தாலும் இணங்காரே; பாம்புமணி
மந்திரத்தால் ஆமே வசம். 7

### தீயவரை நீங்குக:

கொம்புளதற்கு ஐந்து; குதிரைக்குப் பத்துமுழம்;
வெம்புகரிக்கு ஆயிரந்தான் வேண்டுமே;—வம்புசெறி
தீங்கினர்தம் கண்ணில் தெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி. 8

### பொருள் தரும் துன்பம்:

இன்னல் தரும்பொருளை ஈட்டுதலும் துன்பமே;
பின்னதனைப் பேணுதலும் துன்பமே;—அன்னது
அழித்தலும் துன்பமே; அந்தோ! பிறர்பால்
இழத்தலும் துன்பமே யாம். 9

**உடைவேல முள் போன்றவர் :**

தாமும் கொடார் ; கொடுப்போர் தம்மையுமீ யாதவகை
சேமம்செய் வாரும் சிலருண்டே—ஏமநிழல்
இட்டுமலர் காய்கனிகள் ஈந்துதவும் நன்மரத்தைக்
கட்டும்உடை முள்ளனவே காண். 10

**அருஞ்சொற்பொருள் :**

இது நீதி மொழிகளைக் கூறும் வெண்பாவாலாகிய நூல். இதன் ஆசிரியர் இன்னுர் என்பது தெரியவில்லை.

1. மதுரவாக்கால்-இனிய சொல்லால், சகம் - உலகத்தவர், மொழி - இசை, கர்த்தபம் - கழுதை, அபராதம் - பிழை. உலகத்தார் இன்சொல் கூறுபவரைப் புகழ்வர் ; வன்சொல் வழங்குபவரை இகழ்வர்.

2. எண்ணுன்கு - எட்டு + நான்கு, வகை சேர் - பல வகைப்பட்ட, தொகை சேர் - மிகுந்த, சுகம் - இன்பம்.

நாக்கினடத்துப் பல்லுக்குள்ள பகை, அதனைச் சில வேளை கடித்தல். நல்லோர் பகைவரிடத்தும் அன்பு பாராட்டி அவரால் நன்மை அடைவர்.

3. வருத்தவளை - வளைக்கவளைகின்ற, முடியின்மேல் ஆம் - முடிக்கு மேலே பல்லக்குக் கொம்பாய் உயர்வு பெறும், வேழம்பர் - கழைக்கூத்தாடிகள். பணிவுள்ளோர் பெருமையும், பணிவில்லார் சிறுமையும் அடைவர்.

4. ஆசு - குற்றம், அடியான் - அடிமை (தான் - அசை)

ஆசையுடையவன் யாவர்க்கும் அடிமையாவான் ; ஆசையை வெறுத்தவன் உலகிற்கே தலைவனுவான்.

5. தேர்ந்து - ஆராய்ந்து, செய்ய - செம்மையான, குடி வீடு, நகுலன் - கீரி, பொன் மறைக்கொடி - அழகிய பார்ப்பனத்தி, மனத்தாபம் - மனத்துயரம். ஆராயாது செய்பவர் அல்லல் உறுவர்.

6. விடம் - நஞ்சு, இருந்தேள் - கொடுமையிற் பெரிய தேள், வாய்த்த - பொருந்திய, அரவு - பாம்பு, அங்கம் - உடம்பு. துட்டர் தீமையே உருவாயிருப்பர்.

7. தோகை - மயில் போன்றவள், துலை ஒக்கினும் - (தீமை செய்யும்) அளவில் ஒத்திருப்பினும், இணங்கார் - வசப்பட்டார்; துட்டர் பாம்பினும் கொடியவராவர்.

8. வெம்பு - கோபிக்கின்ற, வம்பு செறி - கொடுமை மிகுந்த. துட்ட மிருகங்களுக்கு வழி விலகிப்போதல் வேண்டும்; ஆனால், துட்டர் கண்ணுக்கு மறைந்தே செல்லல் வேண்டும்.

9. இன்னல் - துன்பம், ஈட்டல் - சம்பாதித்தல். பொருளைச் சம்பாதித்தலும், பாதுகாத்தலும், இழத்தலும் துன்பமே தரும்.

10. ஏமம் - இன்பம், இட்டு - செய்து, கட்டும் உடை முள் என - சூழ்ந்த உடைவேல முள்ளைப்போல.

தாமும் கொடாது, கொடுப்போரையும் தடுக்கும் பாதகர் பழமரத்தைச் சுற்றியுள்ள முள்ளைப் போல்வர்.

## 4. சதகங்கள்

### அறிவுடையோர் அறிவிலார் இயல்பு :

விற்பனர்க்கு வாழ்வுவந்தால் மிகவணங்கிக்
கண்ணேட்டம் மிகவும் செய்வர் ;
சொற்பருக்கு வாழ்வுவந்தால் கண்தெரியாது ;
இறுமாந்து துன்பம் செய்வர் ;
பற்பலர்க்கும் வாழ்வுதரும் தண்டலையா
ரே !சொன்னேன் : பண்பில் லாத
அற்பருக்கு வாழ்வுவந்தால் அர்த்தராத்
திரிகுடைமேல் ஆகுந் தானே. 1

—தண்டலையார் சதகம்

### கொடுத்தால் குறைவு வாராது :

எடுத்தாலும் ஊறும் இறைத்தாலும்
ஊறும் இடைநடுவே
மடுத்தால் மறிபடு மோமணற்
கேணித்தண் ணீரதுபோல்
அடுத்தாரை வாழ்விக்கச் செல்வமுண்
டானவர் அன்புடனே
கொடுத்தாற் குறைவரு மோ ?அச்சு
தாநந்த கோவிந்தனே ! 2

### கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே

தங்கமா னதுதழலில் நின்றுருகி மறுகினும்
தன்ஒளி மழுங்கிடாது ;
சந்தனக் குறடுதான் மெலிந்துதேய்ந் தாலுமே
தன்மணம் குன்றிடாது ;
பொங்கமிகு சங்குசெந் தழலில்வெந் தாலுமே
பொலிவெண்மை குறைவுறாது ;
போதவே காய்ந்துநன் பால்குறுகி னாலும்
பொருந்துசுவை போய்விடாது ;

துங்கமணி சாணையில் தேய்ந்துவிட் டாலும்
துலங்குணம் ஒழியாதுபின்
தொன்மைதரு பெரியோர் மடிந்தாலும் அவர்
தூயநிறை தவருகுமோ? [களது
மங்களகல் யாணிகுற மங்கைசுர குஞ்சரி
மணந்துமகிழ் மால்மருகனே!
மயிலேறி விளையாடு குகனே! புல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே! 3

—குமரேசசதகம்

அருஞ்சொற்பொருள்:

1. நூறு பாடல்களைக் கொண்ட நூல் 'சதகம்' எனப்படும். தண்டலையார் சதகம், பழமொழி விளக்கம் எனவும் வழங்கும். இதன் ஆசிரியர் படிக்காசுப் புலவர். இவர் பிறந்தவூர் தொண்டைமண்டலத்திலுள்ள பொன் விளைந்த களத்தூர்.

விற்பனர் - அறிவிற்சிறந்தவர், சொற்பர் - அறிவில் லாத கீழ்மக்கள், இறுமாந்து - கர்வங்கொண்டு, அர்த்த ராத்திரி - நடு இரவு. 'அற்பருக்குப் பவிசு வந்தால் அர்த்தராத்திரியில் குடை பிடிப்பர்' என்பது பழமொழி.

2. ஒவ்வொரு பாடலும் கோவிந்தனே என முடிதலின் இது கோவிந்த சதகம் எனப்பட்டது. இதன் ஆசிரியர், வெண்மணி நாராயண பாரதியார். மடுத்தால் - தடைப்படுத்தினுல், கேணி - கிணறு, அச்சுதன் - அழிவில்லாதவன், அச்சுதாநந்தன்-அச்சுத + ஆநந்தன்.

'இறைத்த கிணறு ஊறும்' என்பது பழமொழி.

3. குமரேசன் மீது பாடப்பட்ட சதகம். ஆசிரியர்— குருபாததாசர். இவர் இயற்பெயர் - முத்து மீனுட்சிக் கவிராயர் என்பது. இவர் 200 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர்.

தழல் - நெருப்பு, மறுகினும் - வருந்தினும். குறடு - மரத்துண்டு, பொங்கமிகும்-சிறந்து விளங்கும், போதவே- மிகுதியும், துங்கமணி-உயர்ந்த இரத்தினம், மடிந்தாலும்- வறுமையுற்றாலும், நிறை - ஒழுக்கம், தவருகுமோ - குறையுமோ?

# II. கதைப் பகுதி

## I. வீரபாண்டியக் கட்டபொம்மன்

ஆங்கிலேயர், தம்மை எதிர்த்துப் போரிட்ட கட்டபொம்மனைக் கைது செய்த பின்னர் அவனை விசாரணை செய்தனர். அவர்கள் அவனை நோக்கி, "கட்டபொம்மா, உன்னைச் சிறை பிடித்துவிட்டோம்; வரிப்பணத்துக்கு என்ன பதில் கூறுகிறாய்?" என்றார்கள்.

அந்தச் சேதிக்கந்த கட்டம நாய்க்கனும்
அச்சணம் தெம்புடன் ஏதுசொல்வான்;
'என்னை இனிஎன்ன சொல்லச்சொல் லுகின்றாய்
இங்கே இங்கிலீசு வெள்ளைக்காரா! 1

'உன்கையி லேயிங்கே சிக்கிக் கொண்டுநான்
இருக்கையி லேஎன்ன சொல்லுவது?
என்கையி லேநீங்கள் சிக்கிகொண் டிராஞல்
ஏழுதுண் டமாக வெட்டிவைப்பேன்!' 2

என்றுசொல் லிப்போட்டுக் கட்டம நாய்க்கன்
எதிர்த்துக்கொண் டான்கமுட்டி யார்மேலே
அந்தச்சே திகேட்டுக் கமுட்டி யாருமே
அச்சணம் கையைக் கடித்துக்கொண்டு 3

கையைக் கடித்துத் தானும் தரித்த
தொப்பியைப் பிடுங்கிக் கீழடித்து,
'கட்டம நாயக்க னைக்கொண்டு போய்க்கயத்
தாற்றுமூ லையிலே தூக்குங்கடா!' 4

கயத்தாற்று மூலையில் தூக்கச்சொல் லிஇன்னம்.
கமுட்டிக் காயிதம் தான்கொடுத்தான்.
கமுட்டிக் காயிதங் கொடுத்த தைக்கண்டு
கட்டமன் குரிச்சி விட்டெழுந்து 5

கூட்டுப் பல்லாக்கு வந்த தும்மேலே
கட்டமன் ஏறினன் பல்லக்கினில்;
நாலுது ரைஇரு பத்தொரு கும்பினி
நல்லா வருகுது கும்பினியும். 6

‘ கட்டம னைத்தூக்கிப் பாளையங் கோட்டையில்
கடிதத் துடனும் போயிறங்கு,’
என்றுசொல் லிப்போட்டுக் கமுட்டி யாருமே
இந்தஉத் தரவு தாங்கொடுத்து 7

பதினைந் தாம்நாளில் வந்திருந் தாரையா
பாளையங் கோட்டைக் கெடிதலத்தில்;
கட்டமன் பல்லாக்கு வந்திறங் கினதும்
கட்டமன் தம்பிமார் வந்துகண்டார். 8

மக்காளி அக்னீசு வைத்துப் போட் டேஇனி
வாரான் கற்கட்டு பிற்கட்டுமாய்;
கயத்தா றுதேடி கட்டம நாய்க்கனைக்
கயத்தாற் றினுக்குக் கொண்டுவந்து 9

கயத்தாற் றினுக்குக் கொண்டுவந் துதுரை
கட்டச்சொன் னுரையா பல்லாக்கு;
கூட்டுப்பல் லாக்கையும் விட்டிறங் கிஅந்தக்
கோபமுள் ளதுரை கட்டபொம்மன் 10

‘ என்னைத்தூக் கும்மரம் ஏத்தடா இச்சணம்
என்னைக்கொல்லடா பிற்கட் !’என்றான்.
‘ என்னைத் தூக்கிலே போடுறேம் என்றுமக்
கித்தனை சந்தோசம் ஆகாது !’ 11

கட்டம நாயக்கன் தான்சிரித் துக்கொண்டு,
‘ காட்டடா தூக்கு மரத்தை ’என்றான்.
‘ உன்னைத் தூக்க மரமும்நான் காட்டுறேன் ;
கண்ணுக்குச் சீலையைக் கட்டிக்கொள்ளு !’ 12

என்று துரைகாட்ட நாயக்கன் சிரித்தே
தூக்கு மரத்தை நாடிச் சென்று,
'என்னை ஒருத்தரும் தூக்கவேண் டா ;இனி
யானகைத் தூக்கிட்டுக் கொள்ளுகிறேன்.' 13

என்று சொல் லிப்போட்டுக் கட்டம நாய்க்கனும்
இங்ஙனம் சொல்லிய அப்பொழுதே
'ஆண்டவளே !குல நாயகி யே !என்னை
ஆதரிக் கும்சக்க தேவியம்மா ! 14

'ஏதுமற் றகம்பு மரத்தில் தொங்கிட
இந்த எழுத்தும் எழுதினையோ !'
என்று கழுத்தில் சுருக்கிட்டுக் கொண்டுதன்
காலாலே தட்டினன் வண்டியைத்தான். 15

உருளை வண்டி உருண்டிட வேதுரை
உள்ளங் கழுத்தில் கயிறிறுக்கக்
கழுத்தில் கயிறு தான்இறுக் கக்கட்ட
பொம்மன் கயிலாசம் சேர்ந்தானே ! 16

—மங்கலம் வாழ்கவி

**கதைச் சுருக்கம் :** தென்பாண்டி நாட்டுச் செகவீர பாண்டியன் சந்ததி இல்லாமல் இறக்க அவனுக்குப் பக்கத் துணையாயிருந்த கம்பளத்துத் தலைவனது எட்டாம் குமாரனை கெட்டிபொம்மு இறுதிக் கடன்களைச் செய்து அவன் அரியாசனத்தில் அமர்ந்தான். அவன் சாலிகுளம் காட்டில் ஒரு முயல் வேட்டை நாய்களை எதிர்த்த இடத்தில், பாஞ்சாலக்குறிச்சிக் கோட்டையைக் கட்டினன். அவன் வழியில் நாற்பத்தேழாவது பட்டத்தரசராய் விளங்கியவரே வீரபாண்டியக் கட்டபொம்மர். இவர் உடன் பிறந்தோர் ஊமைத்துரை, துரைசிங்கம் என்பவர்.

சென்னையிலிருந்த கிழக்கிந்தியக் கம்பெனியார் ஆற்காட்டு நவாபுவுக்குக் கொடுத்த கடனுக்கு ஈடாகத் தென்னாட்டில் வரி வசூல் செய்யும் உரிமை பெற்றனர். ஆகையால், பாளையக்காரர் யாவரும் அவர்களுக்கு வரிசெலுத்தி

வந்தனர். பாஞ்சாலங்குறிச்சியார் மட்டும் வரிகொடுக்க மறுத்தனர். அதனுல் ஆறு ஆண்டுகள் வரி தண்டுவதற்-காகப் பல வித முயற்சிகள் செய்தும் பலனில்லாது போகவே, பாஞ்சையர்மீது கம்பெனியார் போர் தொடுத்-தனர்.

கோட்டையைப் படை வீரர் சூழ்ந்துவிட்டதனுல், அதிலிருந்து தப்பிச் சென்ற கட்டபொம்மர், தம் தம்பிய-ருடன் தர்மமடம் என்ற இடத்தை அடைந்தார். அங்குப் புதுக்கோட்டைத் தொண்டைமான் சென்று தந்திரமாகக் கட்டபொம்மரைத் தம் மாளிகைக்கு அழைந்து வந்து, ஆங்கிலேயத் தளபதிக்குக் கடிதம் எழுதிப் படைகளைத் தருவித்தார். படைகள் மாளிகையைச் சூழ்ந்துகொண்-டன. கட்டபொம்மர் பிடிபட்டார்.

அருஞ்சொற்பொருள் :

1 - 4. சேதி - செய்தி ; தெம்பு - மகிழ்ச்சி ; கமுட்டி யார் - பானர்மன் என்ற துரையும் பிறரும்.

5 - 8. குரிச்சி - நாற்காலி; கும்பினி - கம்பெனியார். பல்லக்கில் கட்டபொம்மர் கயத்தாற்றுக்குக் கொண்டு செல்லப்பட்டார்.

9 - 12. மக்காளி - மெக்காலே என்ற துரை, அக்கினீசு, பிற்கட்டு - துரைகளின் பெயர்கள். கட்டபொம்மர் பல்லக்கு விட்டிறங்கிப் பிற்கட்டுத் துரையிடம், 'தூக்கு மரம் எங்கே? என்னைத் தூக்கிலிட்டுக் கொன்றுவிட்டாய் என மகிழ்ச்சி கொள்ளாதே!' எனக் கூறினர். அதற்கு அவன், 'தூக்கு மரத்தைக் காட்டுகிறேன் ; கண்ணில் துணியைக் கட்டிக்கொள்,' என்ருன்.

13 - 16. "என்னை ஒருவரும் தூக்கிலிட வேண்டா. நானே தூக்கிட்டுக் கொள்ளுகிறேன்,' என்று கூறித் தம் குலதெய்வமான சக்கம்மா தேவியை வணங்கி, உருளை வண்டியிலேறித் தம் கழுத்தில் தாமே சுருக்கிட்டுக் கொண்டு, வண்டியைக் காலால் உதைத்துத் தள்ளவே, கழுத்தில் கயிறு இறுக்க உயிர் துறந்தார் கட்டபொம்மர்.

## 2. தேசிங்கு ராஜன் கதை

### தேசிங்கு ராஜன் குதிரை ஏறுதல்

(செஞ்சிக்கோட்டையரசன் தேரணிராஜனும், அவன் தம்பி தரணிசிங்கும் டில்லி பாதுஷாவினுல் அழைக்கப்பட்டு, அங்குப் பாராசாரி என்ற குதிரையின்மீது ஏறி அதை அடக்க முடியாமல், டில்லியில் சிறையிருந்தனர். தேரணி ராஜன் மகனுன தேசிங்குராஜன் இதனையறிந்து, தன் தோழன் மோவுத்துக்காரனுடன் அங்குச் சென்று, அக்குதிரையை அடக்கித் தன் தந்தையை அழைத்து வருவதாகத் தாயிடம் கூறி டில்லியை அடைந்தான். சக்கரவர்த்தியான டில்லி பாதுஷாவின் அவைக்களத்தை அடைந்து, "டில்லிப துரையே, உம் தேசத்தில் உயர்ந்த புரவியான பாராசாரியைச் சவாரி செய்ய வந்தேன்," என்ருன். டில்லி பாதுஷாவும் அவன் தந்தையும் தடுத்தும் கேளாது, தேசிங்கு மோவுத்துக்காரனுடன் குதிரை நின்ற இடத்தை அடைந்தான்.)

புலிக்குட்டி போலப் பாய்ந்தே அவனும்
　　புரவி ஏறினுனும் ;
ஏறின வுடனே பாரா சாரி
　　என்ன செய்யுதுபார் !
தடதட வென்று தவிக்குது பாரு
　　அந்தக் குதிரைதானும் !
கிடகிட வென்று கிளம்பிக் குதித்தது
　　அந்தக் குதிரைதானும் !
லகானி முத்துக் கையிலே பிடித்தான்
　　ராஜா தேசிங்கு.
'ஐயா ! கேளும் ஐயா ! கேளும்
　　என்னைப் பெற்றவரே !
புரவி யேறிச் சவாரி போறேன் ;
　　பெற்றவ ரே,ஐயா !

தப்பித் தவறி வந்தே னுனல்
தழுவிக் கொள்ளும்ஐயா !
இன்றைக்கும் சாவு நாளைக்கும் சாவு
இருக்குது தலைமேலே ;
ஒன்றுக் கும்நீர் அஞ்ச வேண்டா ;
உறுதி கொள்ளும்ஐயா !'
சொன்ன சொல்லைக் காதிலே கேட்டார்
தேசத்து ராசாக்கள் ;
ஐம்பத் தாறு தேச ராசரும்
அடங்கலும் கேட்டார்கள் ;
'மகனே ! மகனே ! என்செய்வோம் !' என்று
வயிற்றைப் பிசைந்தார்கள் ;
போகா தேபோ காதே மகனே !
புரவி கொண்டு போமே !
இந்த லோகத்துப் புரவி யல்லவே
எங்கள் கண்மணியே !
உயிருடன் உன்னை விட்டுப் பிரிந்து
உலகத்தி லிருப்போமோ !
பிறந்த போதே இறந்து போனுல்
பெரிய துக்கமில்லை ;
குதிரையை விட்டுக் குதித்து வாடா
குழந்தை என்மகனே !
என்உயிர் பூமியி லேதரித் திருக்க
இறங்கி வாசுதனே !'
அந்த மொழியைக் காதிலே கேட்டான்
அதிரூப தேசிங்கு ;
கலகல என்று சிரித்தா னையா
கதும்பும் புலிபோல ;
'இங்கே யிருந்தால் இன்னங் கவலை
என்ன ஆகுமோதான் !

கோவிந் தா !கோ விந்தா !' என்று
குதிரையைத் தட்டிவிட்டான் ;
தட்டின தட்டில் குதிரை கிளம்பித்
தரையில் நில்லாமல்,
ஆகாய மார்க்கம் வந்து பாயுது
அந்த வேகக்குதிரை !
சூரியன் போல துலங்குது பாரு
சொர்ண மேகக்குதிரை ;
கண்கண்ட தூரம் பார்த்து ராசர்கள்
கலங்கி நின்ருர்கள் ;
பாய்கிற குதிரையைக் கண்ணுல் கண்டு
பரிதவித் திட்டார்கள்.
மேக மண்டலம் அளாவி வருவதைப்
பார்த்தான் தேசிங்கு ;
லகானை இழுத்துச் சிமிட்டாக் கொடுத்தான்
ராசா தேசிங்கு;
சிமிட்டாக் கொடுத்த வேகத்தி ஞலே
சீறிப் பாய்கிறது ;
கோபம் வந்து மூண்டு கொண்டது
ராசாவுக் காணுலும்
காடு மலைகள் செடிக ளெல்லாம்
கலங்கி நடுங்கிடவே,
மலைகள் இடிந்து தவிடு பொடியாய்
மண்மேல் விழுந்திடவே,
குன்று மலைகள் தாண்டிக் குதிரை
குதித்துப் போகிறதாம் ;
குதிரை போகும் வேகத் தாலே
பூமி குலுங்குதுபார் !
பருவ தங்கள் படபட வென்று
பதறி நடுங்குதுபார் !

அங்கி ருந்தே குதிரையைத் திருப்பினன்
அந்தப் பாலகனும் ;
லங்கையை நான்கு சுற்று கத்தான்
நடத்திக் கொண்டுவாரான் ;
மெள்ளச் சிமிட்டாக் கொடுத்துக் கொண்டு
மெதுவாய் வாரானே !
பக்கச் சிமிட்டாக் கொடுத்துக் கொண்டு
பாலன் வாரானே !
கலகல கலகல கலகல என்று
கனைத்து வருகுது பார் !
கனைத்த சத்தத்தைக் காதிலே கேட்டார்
கன்னட தேசத்தார் ;
ஐம்பத் தாறு தேச ராசரும்
ஆகாய மேபார்த்தார் ;
சூரிய னைப்போல் துலங்கி வருகுது
சொர்ண மேகக்குதிரை !
வருகிற பாலனைக் கண்ணால் கண்டு
மகிழ்ச்சி யடைந்தார்கள்.
தேரணி ராசனும் டில்லிப துரையும்
தேடி ஓடிவந்தார் ;
சந்தோஷம் வந்து மூண்டு கொண்டது
சகல தேசத்தார்க்கும் ;
அந்தச் சமயத்தில் வந்து நிறுத்தினன்
அந்தப் பாலகனும் ;
பாரா சாரியைக் கொண்டு நிறுத்தினன்
பால சூரியன்போல்.

அருஞ்சொற்பொருள் :

1 - 10. புரவி - குதிரை, தேசிங்கு தன் தந்தையைத் தேற்றுதல்.

10 - 20. அடங்கலும் - எல்லாம், மாதா-தாய், சுதன்- மகன். தந்தையும் மற்ற அரசர்களும் தடுத்துக் கூறல்.

21 - 29. அதிரூபம் - மிகவும் அழகுடைய, கதும்பும்- கோபிக்கும், சொர்ணம் - தங்கம்.

இங்கு நிற்பது சரியல்லவென்று கோவிந்தா எனக் கூறிக் குதிரையைத் தட்டிவிட்டான். அது ஆகாயத்தில் கிளம்பி, அரசர்கள் கண்டு கலங்கப் பாய்ந்து சென்றது.

30 - 40. மேக மண்டலம் - வானவெளி, லகான் - கடிவாள வார், சிமிட்டாக் கொடுத்தல் - வாரை இழுத்து விட்டுச் சவுக்கினல் அடித்தல், சீறி - கோபித்து, ஐந்து நாட்கள் பூமியெங்கும் சுற்றிய பின், இலங்கையையும் சுற்றி டில்லியை நோக்கி வந்தான்.

40 - 51. துலங்கி - விளங்கி, பால சூரியன் - இளஞ் சூரியன். ஐம்பத்தாறு தேசத்து அரசர்களும் வியந்து சூழ, டில்லி பாதுஷாவும் தன் தந்தையும் ஓடி வரத் தேசிங்கு குதிரையினின்றும் இறங்கினன்.



